




சௌமிய, ஆடி 26 ● 1969 ஆகஸ்டு, 10



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அட்டைப் படம்: உதய பாஸ்கர்

தேசப் பொருளாதாரம்

புத்தகச்
சமையலில்
பொருளாதாரம்
பொசுங்குகிறது!

நாம் எதைப் பேசுகிறோமோ
அதையேதான்
பிரதமர்
காரியத்தில்
செய்கிறார்!

ஏ.கே.
கோபாலன்

உள்ளுக்குள்
இருந்தே
சாஸனத்தை
முறிப்போம்.

ஈ.எம்.எஸ்

PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

மலர் 29 ❀ இதழ் 2



# கேளுங்கள், காங்கிரஸ் தோழர்களே!

**நா**ன் மனப்பூர்வமாகச் சொல்வதைக் கேட்டு இந்த வேண்டுகோளுக்குக் காங்கிரஸ்காரர்கள் செவி சாய்க்க வேண்டும். அம்மாதிரி கோருவதற்கு எனக்கு அவர்களிடம் இன்னும் பாத்தியதை இருப்பதாகவே கருதுகிறேன். இந்திய மக்களுக்கு எது நல்லது என்பதைப் பற்றி இப்பொழுது கருத்துக்களிடையேயும் நம்பிக்கைகளிடையேயும் ஒரு மோதல் ஏற்பட்டிருக்கிறது. அதுதான் இப்போது கவனிக்க வேண்டிய நெருக்கடி.

காங்கிரஸ் என்பது ராஜீய சிந்தனையாளர்கள் தாமாகச் சேர்ந்துள்ள ஒரு சங்கம். அப்படி நடப்பதற்குப் பதிலாகத் தாம் ஒரு புதிய ஜாதி, அல்லது பிரிவு போல் காங்கிரஸ்காரர்கள் மாறிவிடலாகாது என்று எச்சரிக்கிறேன். காங்கிரஸ்காரர்கள் கம்யூனிஸத்தை நெடுநாட்களாக எதிர்த்து வந்திருக்கின்றனர். கம்யூனிஸத்தை நாட்டிலிருந்து நீக்க இரண்டு வழிகள் உண்டு. கம்யூனிஸத்தின் கீழ் பிரஜைகளின் சுதந்திரம் நஷ்டமாவது உறுதி. இதை எடுத்துச் சொல்லி மக்களுக்கு உணர்த்துவது ஒரு வழி. இதைச் செய்தோமானால் அப்பாவிகளை ஏமாற்றவோ, பலாத்காரத்தின் மூலம் குழி பறிக்கவோ தொழிலில் அமைதியைச் சீர்குலைக்கவோ முடியாதபடி செய்யக் கூடும். மற்றொரு வழி, கம்யூனிஸ்டுகள் தாமாகவே என்ன செய்வார்களோ அதே வழியில் செல்கின்ற போட்டா போட்டிக் கொள்கையைப் பின்பற்றுவது. காங்கிரஸின் இப்போதைய கொள்கை இரண்டாவது வழியாக அமைந்துள்ளது. இது அபாயமான விளையாட்டு. தேசத்தின் நலனைப் பாழ்படுத்தக் கூடியது. ஸ்ரீமதி இந்திரா காந்தி நிர்வாகத்தை நடத்திச் செல்லும் விதம் ஏராளமான காங்கிரஸ்காரர்களுக்கு உடன்பாடாக இல்லை என்று நம்புகிறேன். இப்போது வெளிப்படையாக அவர் கையாளும் கொள்கைகள் அவர்களுக்குப் பிடித்தமாக இல்லை. ஆனால் தாம் உண்மையில் எதைத் திடமாக நம்புகிறார்களோ அதற்காகத் தைரியத்துடன் போரிடுவதற்கு அவர்கள் அஞ்சுகிறார்கள். அதனால்தான் அவரது தலைமையை விடாது பற்றிக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பயங்காளித்தனத்தைக் காங்கிரஸ்காரர்கள் கைவிட்டாக வேண்டும். கட்சியை விடத் தேசந்தான் அதிக முக்கியமானது.

ஸ்ரீமதி இந்திரா காந்தி கம்யூனிஸ்டுகளுக்கும் அவர்களது வழியினருக்கும் ஏஜண்டாகவும் கருவியாகவும் மாறிவிட்டார். தியாகங்கள் புரிந்து, தைரியமாக நடந்து கொண்டு, இந்தியாவுக்குச் சுதந்திரத்தை வாங்கித் தந்த தேசபக்தர் குழாத்திடம் அவ்வளவு பிடித்தம் இன்று அவருக்கு இல்லை. கம்யூனிஸ்டுகளும் அவர்களது துணைவர்களும் அளிக்கும் உதவியின் மூலம் சிறுபான்மையோரைப் பெரும்பாலோராகக் காட்டிக் கொள்வதுதான் இப்பொழுது காணப்படுகிறது. எண்ணிக்கை ஒருபுறமிருக்கட்டும். உங்கள் திட மனம் எதை வலியுறுத்துகிறதோ, எது சத்தியமோ, அதற்காக உறுதியுடன் நீங்கள் போரிட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அதன் மூலம்தான் சர்வாதிகாரமும் கம்யூனிஸம் என்ற அடிமை வாழ்வும் வராதபடி தேசத்தைக் காப்பாற்ற முடியும். பெயர் எதுவாக இருந்தாலும் ஸ்ரீமதி இந்திரா காந்தி செல்வது கம்யூனிஸ்ட் கொள்கைகள் காட்டும் வழியில்தான். ஓர் அடியெடுத்து வைத்த பின் அதே திசையில் மற்றொரு அடியெடுத்து வைப்பதென்பது நிகழத்தான் செய்யும். இறுதியில் அறிவு முதிர்ச்சி இல்லாத தலைமையானது தேசத்தை அப்பட்டமான சர்வாதிகாரத்தில் ஆழ்த்திவிடும்.

படிப்படியாக, ஆனால் வேகமாக, சுதந்திரமான வாழ்க்கை முறை நாசமாகி வருகிறது. இந்த ஆபத்தான

போக்கைத் தடுத்து நிறுத்த வேண்டுமானால், காங்கிரஸ்காரர்கள் தைரியத்துடன், மன உறுதியுடன், உண்மைக்கு மதிப்புத் தந்து செயல் புரிய வேண்டும். பிறரிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவே ஒன்றுபட்டிருக்கும் அவையத்திலுள்ள தனி ஜாதி அல்லது பிரிவுதான் காங்கிரஸ் என்ற எண்ணம் போய்விட வேண்டும். அரசியல், ஜனநாயகம், கட்சிகள் ஆகிய எல்லாம் இருப்பது சமுதாயத்துக்குச் சேவை புரிவதற்காக. சுயநலத்தை வளர்த்துப் பதவியைப் பிடித்துக் கொள்வதற்காகவோ, அதற்கென ஒன்றுபட்டுச் சூழ்ச்சி செய்வதற்காகவோ அல்ல.

ஏழைகளை மேம்பாடு அடையச் செய்வதற்கு நாம் விரும்புகிறோமா? அதற்காகச் செல்வத்தைச் சிருஷ்டிக்கிறோமா? அதற்காகத் தொழில்கள் முன்னேற வேண்டும் என்று விரும்புகிறோமா? இதற்கெல்லாம் பகுத்தறிவில் நம்பிக்கை வைத்துச் சுறுசுறுப்பாகப் பாடுபட வேண்டாமா? அப்படிச் செய்யாமல், கானல் நீர் வேட்டையில் இறங்கி, பொருளாதாரம் திவாலாகிவிடும்படி அனுமதிக்கலாமா? ஆகிக்க வேட்டையில் தனிப்பட்ட பதவி வாய்ப்புக்களை இழக்காமல் இருக்க வேண்டும் என்பதற்காக, தெளிவான ஆட்சேபக் குரலை எழுப்புவதற்குத் தைரியம் இழந்து, இதன் விளைவாகத் திவாலாகிவிட்ட பொருளாதாரத்தை நமது குழந்தைகளுக்கு ஆஸ்தியாக வைத்து விட்டுப் போவதா? "பிற்போக்காளர்" என்று உங்களைச் சிலர் சொல்வதைக் கண்டு பயப்பட வேண்டாம். மனம் கலங்க வேண்டாம். அறியாமையினின்று எழுந்த பிதற்றல் என்று, இந்தச் சொல்லம்புகளைப் பொருட்படுத்தாது இருந்து விடுங்கள். பிரஜைகளின் சுதந்திரத்தைப் பறித்து அவர்களை அடிமையாக்கப் பார்க்கிறவர்கள்தாம் பிற்போக்காளர்.

பழந் தலைமையினரில் தேக நிடத்துடன் ஒரு சிலர் இருக்கலாம். சிலர் ஆன்மிக வலிமை பெற்றவர்களாக இருக்கக் கூடும். அவர்களை அடைந்து ஆன்மிக பலம் பெறுங்கள். அவர்களுக்கு உங்கள் ஆதரவைக் கொடுங்கள். காங்கிரஸ் கட்சி தன்னைப் பின்பற்றுவோரிடையே இத்தகைய தார்மிக மறுமலர்ச்சி இயக்கமொன்றை நடத்த வேண்டும் என்பது என் விருப்பம். இதைச் செய்யாது போனால், இனி வரும் ஆண்டுகளில் விவகாரங்களின் போக்கு சகிக்க வொண்ணாததாகிவிடும். அந்நிலையில், தேசத்திலுள்ள யோக்கியர்கள் உங்களை இருந்த இடம் தெரியாமல் துரத்தி அடிப்பர். ஏழைகள்பால் காட்டும் உண்மையான பரிவு நல்லது. ஆனால் அரசாங்க அதிகாரத்தின் மூலம் தாம் நன்மை அடைவதற்காக, ஏழைகளிடம் அன்பு செலுத்துவது போலப் பாசாங்கு செய்வது பாபம். அது பித்தலாட்டச் செயலுமாகும். மக்களின் சுதந்திரத்திலோ அல்லது மதத்திலோ நம்பிக்கை இல்லாதவர்கள் தேசத்தை ஆளும்படி இந்தியா அனுமதிக்காது.

தூக்குக் கயிற்றைச் சர்க்கரைப் பாகில் நனைத்திருக்கிறார்கள். அந்தச் சர்க்கரையைச் சுவைத்த வண்ணம் முடிச்சுக்குள் தலையை விட்டு அது இறுகும்படி விடாதீர்கள். கழுத்திலிருந்து அதை அப்பால் தூக்கி எறியுங்கள். அப்போதுதான் உங்களுக்கே உரிமையாக உள்ள சுதந்திரத்தை நீங்கள் அநுபவிக்க முடியும். நீங்கள் நீக்கு போக்கு இல்லாத தனி ஜாதி அல்ல. சுயமாக ஒன்றுபட்டுள்ள ஓர் அமைப்பினர். எனவே, எது சரியோ, அதைச் செய்வதற்கும், மனச்சாட்சிப்படி ஆதரிப்பதற்கும் எதிர்ப்பதற்கும் சுதந்திரமுள்ளவர்கள் என்பதை உணர்ந்து செயலாற்றுங்கள். திட நம்பிக்கைகளைக் கைவிட்டால் தேசத்துக்கு உங்களால் சேவை செய்ய முடியாது.

காங்கிரஸில் ஒரு கிளர்ச்சியை நான் வெளிப்படையாக இதன் மூலம் வேண்டுகிறேன். இதை நான் கோருவது வேறு எந்தக் கட்சிக்காவது உதவி அளிப்பதற்காக அல்ல. கம்யூனிஸம் என்ற பெருந்தீமையின் கீழ் தேசம் போய் விடுவதைத் தடுப்பதே இந்த வேண்டுகோளின் நோக்கம். கம்யூனிஸம் என்றால் எல்லாப் பிரஜைகளுக்கும் அடிமை வாழ்வு என்றுதான் பொருள். 'சோஷலிஸக் கொள்கை' என்று அழைத்தாலும் கம்யூனிஸம் என்ற உண்மையான பெயரால் குறிப்பிட்டாலும், அதன் விளைவு இந்த அடிமை வாழ்வுதான்.

("ஸ்வராஜ்யா"வில் ராஜாஜி எழுதியதன் தமிழாக்கம்)

# ராஜாஜியின் கருத்துக்கள்

கட்சிக் கட்டளைகளோ, கொறடாக்களோ இல்லாமல் சுதந்திரமாக ராஷ்டிரபதி தேர்தலில் வோட்டளிப்பதற்கு வாய்ப்பு இருக்க வேண்டும் என்ற பிரேரணையைப் பிரதம மந்திரியோ, காங்கிரஸ் கட்சியோ ஏற்கவில்லை. இது எனக்கு ஆழ்ந்த வருத்தத்தைத் தருகிறது. பிரதமரும், காங்கிரஸ் கட்சியும் இப்படிப்பட்ட மனப்பான்மையினராக இருப்பதை முன்னிட்டு, ராஷ்டிரபதியாகச் சேவை செய்ய முன்வரும்படி ஸ்ரீ சி. டி. தேஷ்முக்கை சுதந்திரக்கட்சி, ஜனசங்கம், பாரதீய கிராந்திதளம் ஆகியவை கேட்டுக் கொண்டன. அவர் ஐ. சி. எஸ். அதிகாரியாக இருந்தவர். நிதி மந்திரியாகவும் ரிசர்வ் பாங்கின் கவர்னராகவும் இருந்தவர். அவர் சம்மதித்துப் போட்டியிடுகிறார். ராஷ்டிரபதிபவனம் காங்கிரஸின் கிளைக் காரியாலயம் ஆகிவிடக் கூடாது என்று விரும்பும் எல்லோரும், தங்கள் முதல் வோட்டை ஸ்ரீ தேஷ்முக்குக்குப் போடுவார்கள் என்று நம்புகிறேன். இரண்டாவது வோட்டை ஸ்ரீ சஞ்சீவ ரெட்டிக்குப் போட வேண்டும் என சுதந்திரக் கட்சியும், அதன் நண்பர்களும் முடிவு செய்திருக்கிறார்கள். ஸ்ரீ சஞ்சீவ

ரெட்டி சபாநாயகர் பதவியை ராஜிநாமாச் செய்தவர். வேறு ஒருவரை நிறுத்த வேண்டுமெனப் பிரதம மந்திரி விரும்பிய போதிலும் காங்கிரஸ் அபேட்சகராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு நிற்பவர். வோட்டுச் சுதந்திரத்தைப் பெரிய கட்சியாகிய காங்கிரஸ் அநுமதிக்காத நிலையில், இரண்டாவது வோட்டைப் போடுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. முதல் வோட்டை மட்டும் போடலாம் என்பது இயலாத விஷயம். ஸ்ரீ வி.வி. கிரியின் பிரதான ஆதரவாளர் கம்யூனிஸ்டுகளும் அவர்களைச் சேர்ந்தவர்களுமே. பிரதம மந்திரியின் இப்போதைய போக்கு தேசத்தை நிச்சயமாக கம்யூனிஸத்தில்தான் கொண்டு போய்விடும். அரசாங்கத்தின் முழு ஆதிக்கமே மிஞ்சும். பிரஜைகளுக்குச் சுதந்திரத்தின் மூலம் கிடைக்கும் உரிமைகளும் சுய முயற்சிக்கான வசதிகளும் இல்லாது போய்விடும். பிரதம மந்திரியின் இந்தப் போக்குகளை எதிர்ப்பதற்கு, ராஷ்டிரபதியாகும் பட்சத்தில், ஸ்ரீ வி.வி. கிரியால் துணை புரிய இயலாது. அவரது முக்கிய ஆதரவாளர் கம்யூனிஸ்டுகளாகவும் அவர்களைச் சார்ந்தவர்களாகவும் இருப்பதும் இதற்குக் காரணம். ஸ்ரீ சஞ்சீவ ரெட்டி தேர்ந்தெடுக்கப் பட்டால் அந்த அளவுக்கு காங்கிரஸ் கட்சியின் முத்திரை போல் பணியாற்ற மாட்டார். ராஷ்டிரபதி பவனம் ராஷ்டிரபதியின் காரியாலயமாக இருக்கும்; பிரதம மந்திரியுடைய இலாகாவின் பிரதிபலிப்பாக இராது. கம்யூனிஸத்தை நோக்கி விரைகின்ற போக்கு தடையின்றித் தொடரும்படி விடலாகாது.

★

பத்திரிகைகள் சர்க்காரின் செயலைக் கண்டிக்கின்றன. அப்பொழுது என்ன செய்வது? பத்திரிகைகளை அழித்து விடுவதா? கூடாது. ஏன் இப்படிக் கண்டிக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். கொள்கை பற்றிய புகார்களுக்குப் பதில் சொல்ல வேண்டும். தனக்கும் தெரியாது, தெரிந்தவர்கள் சொன்னாலும் கேட்க மாட்டார்கள் என்ற நிலையில் உள்ளவர்களால் எப்படி ஆட்சிப் பொறுப்பைச் சரிவர நிறைவேற்ற முடியும் ?

★

ஸ்ரீமதி இந்திரா காந்தி பயமுறுத்துகின்ற கொள்கைகளைப் பற்றி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஒரு தலையங்கத்தில் பின்வருமாறு கூறியிருக்கிறது :

''தனியார்த் துறை பாங்குகள், சுதந்திரமான தொழில் உணர்ச்சி, நிர்ப்பந்தமின்றிக் கருத்துக்களை வெளியிடும் உரிமை — ஆகியவற்றின் குரல் வளையைப் பிடித்துச் சர்க்கார் நெரித்தபின், ஜனநாயகத்துக்கு இடமேது? எது அரசுடையதோ அதுதான் நல்லது என்று கம்யூனிஸ்ட் நாடுகளின் பழைய ஏகபோகவாதிகள் கருதினர். இந்தியாவின் புதிய ஏகபோகத்தினரும் அவ்வாறுதான் நம்புகின்றனர். சர்க்காரின் ஏகபோகத் தொழில் முயற்சிகள் சென்ற பத்து ஆண்டுகளில் எவ்வாறு நடந்து வந்திருக்கின்றன என்பதை இந்தியா அநுபவத்தில் அறியும். அது எவ்வளவு நன்மை பயந்தது; அதன் மதிப்பு என்ன என்பதைப் பற்றிய அநுபவம் ஓர் எச்சரிக்கையாக அமைய வேண்டும். ராஜீயத் தலைமையாதிக்கப் போராட்டத்தில் தப்பிப் பிழைப்பதற்காக, தேசத்தை ஒரு பகடையாக உபயோகிப்பது நல்ல ஆட்சியாகாது, நல்ல ஜனநாயகமும் அல்ல. அதற்கு வேறு பெயர்கள் உண்டு.''

*(உதாரணமாக 1968–69ல் துர்க்காபூர் உருக்காலையில் ஏற்பட்ட மொத்த நஷ்டம் ரூபாய் அறுபது கோடி. இத்தகவலை உருக்கு மந்திரி பார்லிமெண்டில் ஜூன் 29ந் தேதி அறிவித்தார்.)*

★

தொழில் துறை அடிமை நிலையில் இருக்கிறது. அது விமோசனத்தைக் கோருகிறது. வேலை வாய்ப்புக்கள் பெருக வேண்டும், உற்பத்தி அதிகரிக்க வேண்டும் என்று விரும்புகிறோம். பெரிய தொழில்களுக்குப் பாங்குகளில் இருந்து கடன் வசதி வரும் வழிகளை அடைத்து விட்டால் இந்த நோக்கம் எப்படிக் கைகூடும்? பெர்மிட் – லைசென்ஸ் ஆட்சி முறை ஏற்படுத்தியுள்ள விலங்குகளிலிருந்து தொழில்களை விடுவிப்பதுதான் இப்போது செய்ய வேண்டிய வேலை. இருபது வருஷங்களாக இருந்து வந்த பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சி முறைதான் இந்த 'ஏகபோகங்'களைச் சிருஷ்டித்துள்ளது. இந்த ஏகபோகங்கள் போக வேண்டுமானால் சுதந்திரமாகத் தொழில் நடத்தக் கூடிய சகாப்தம் ஆரம்பமாக வேண்டும்.

பெர்மிட் — லைசென்ஸ்"களின் நிர்வாகத்தை ஒரு சுதந்திர ஸ்தாபனத்திடம் ஒப்படைக்க வேண்டும். இப்போதுள்ள முறையே நீடித்து ஆளும் கட்சிக்கு 'நன்கொடைகளை' நிர்ப்பந்தித்துப் பெறுவதற்கான கருவியாக அது பயன்படக் கூடாது.

★

தொழிலகங்கள் பெரிய நகரங்களைச் சுற்றியே உருவாவதால் நகரங்களில் நிலவும் மோசமான சூழ்நிலை குறித்து எல்லா நாடுகளின் தலைவர்களும் கவலை கொண்டிருக்கிறார்கள். காமர்ஸ் பத்திரிகையில் தொழிலதிபர் எம். வி. அருணாசலம் தென்னிந்தியாவைப் பொறுத்தவரை இப்பிரச்னையை ஆராய்ந்து எழுதியிருக்கிறார். ஜியார்ஜ் ரோம்னேயும் பிறரும் அமெரிக்காவில் இப்பிரச்னை குறித்து ஆராய்ந்திருக்கிறார்கள். நம்முடைய தேவை, பெரிய தொழிலகங்கள் தங்கள் கிளைகளைக் கிராமப்புறங்களில் ஆரம்பிப்பதல்ல. சிறிய சிறிய தனித் தனி தொழிலகங்கள் சிற்றூர்களைச் சுற்றிலும் தோன்ற வேண்டும். இப்படி தொழிலகங்கள் பரவலாக இடம் பெறத் தேவையான விதத்தில் மின் சக்தியும் போக்குவரத்து வசதிகளும் நாட்டில் அமைய வேண்டும்.

# பணம் போட்டவர் குரல்

பாங்கு மசோதா பற்றிப் பணத்துக்குச் சொந்தக்காரர்களாகிய டெபாசிட்தாரர்களின் அபிப்பிராயம் என்ன என்று அறிய அரசாங்கமோ, காங்கிரஸ் கட்சியோ, இதர சோஷலிஸ்ட், கம்யூனிஸ்ட் கட்சிகளோ கவலை கொள்ளவில்லை. அதில் அக்கறை காட்டிய பெருமை சுதந்திரக் கட்சி அங்கத்தினர் திரு பி. பி. பட்டோடியாவைச் சாரும்.

1920 டெபாசிட்டர்கள் கையெழுத்திட்ட மகஜர் ஒன்றை அவர் பார்லிமெண்டில் சமர்ப்பித்தார். இந்த மசோதாவினால் டெபாசிட்டுதாரர்களின் நலன் பாதிக்கப்படும் என்றும், அவர்களுடைய பணம் மேன்மேலும் அரசியல்வாதிகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு அவர்களால் நஷ்டத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் 'ஹிந்துஸ்தான் ஸ்டீல்' போன்ற பல சர்க்கார் துறை நிறுவனங்களுக்கு விநியோகிக்கப்படும் என்றும், அதனால் பாங்குகளே லாபகரமாக இயங்குவது பாதிக்கப்படும் என்றும், அதனால் டெபாசிட்டுதாரர்களுக்குக் கிடைக்கக் கூடிய வட்டி விகிதமே குறைந்து போகலாம் என்றும் தெளிவாக அம்மகஜரில் கூறப்பட்டிருக்கிறது. பணம் போட்டவர்களுக்கு எவ்வகையிலும் நன்மை விளைவிக்காத இம்மசோதாவைச் சர்க்கார் நிறைவேற்றாமலிருத்தலே நல்லது என்று அதில் கேட்டுக் கொள்ளப்பட்டது.

எவ்வளவு தூரம் இந்தக் கூக்குரல் ஆவேச வெறியினால் பீடிக்கப்பட்டுள்ள பிரதமர் காதில் விழுந்து மனத்தில் பதியும் என்று சொல்வதற்கில்லை. நிதானமிழந்த நிலை, சட்டம் இயற்றுவதற்கு உகந்த நிலையல்ல என்பதை அறிஞர்கள் உணருவர். அரசியல்வாதிகள் உணருவார்களா?

# பிரியா விடை; பிரியமான வரவேற்பு

சென்னைப் பல்கலைக் கழகத்தின் நீண்ட வரலாற்றில் தமக்கென்று நிரந்தரமான இடத்தைத் தேடிக் கொண்டு, தமது அபார திறமையினாலும், அறிவாற்றலினாலும் சேவை உணர்ச்சியினாலும் சர்வகலாசாலையிலிருந்து பிரித்துச் சொல்ல இயலாத வண்ணம் செயலாற்றிய டாக்டர் ஏ. லக்ஷ்மணஸ்வாமி முதலியார் இம் மாதம் 1ந் தேதியிலிருந்து விலகிக் கொள்கிறார். சரித்திரமே காணாதவாறு இருபத்தேழு ஆண்டுகள் தொடர்ந்து உப அத்யக்ஷகர் பதவியை வகித்து, இந்த நீண்ட காலத்தில் சர்வகலாசாலையின் தன்மையையும், பெருமையையும் விரிவாக்கி உயர்த்த அவர் ஆற்றிய பெரும் பணி போற்றுதற்குரியது. சுதந்திர இந்தியாவில் உயர் கல்வியின் தரத்தையும், போக்கையும் நிர்ணயித்து நடத்தும் உரிமையை மனம் போனபடியெல்லாம் சந்தர்ப்பத்துக்கு உகந்தவாறு பயன்படுத்தாமல், உயர் கல்வியின் உண்மை வளர்ச்சிக்காகவே பாடுபட்டு வெற்றியும் கண்டவர் டாக்டர் முதலியார். சுமார் நாற்பது புதுப் பிரிவுகளை உயர் கல்விமட்டத்தில் ஏற்படுத்தி, சென்னை சர்வகலாசாலை மாணவனின் தரம் இன்னமும் உலக அரங்கத்தில் உயர்ந்த அந்தஸ்திலே நிலைக்கப் பாடுபட்டவர். ஆங்கிலத்தின் மூலமே நமது அறிவையும் அந்தஸ்தையும் உயர்த்திக் கொள்ள முடியும் என்பதைத் திடமாக உணர்ந்த டாக்டர் முதலியார் பல எதிர்ப்புக்களையும் சமாளித்தார். பிரதேச மொழிக்குச் சலுகை காட்ட வேண்டியபோது சமரசம் காட்டி, உறுதியுடன் இருக்க வேண்டிய போதெல்லாம் நன்முறையிலேயே காரியத்தை நிறைவேற்றிக் கொண்டு சர்வ கலாசாலையின் சுதந்திரத்தை விட்டுக் கொடுக்காது இருந்து வந்திருக்கிறார் டாக்டர் முதலியார். பதவியிலிருந்து விலகிக் கொண்டாலும் அவருடைய நீண்ட அநுபவமும், அறிவும் அவசியம் ஏற்படும்போதெல்லாம் சர்வகலாசாலைக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் என்று நம்பலாம்.

நல்லதொரு கட்டடத்துக்குப் பலமான அஸ்திவாரம் போட்டு, கட்டடமும் எழுப்பித் தமக்குப்பின் பதவி ஏற்கும் புதிய உப அத்யக்ஷகர் திரு என். டி. சுந்தரவடிவேலுவுக்கு அளித்துச் செல்லுகிறார் டாக்டர் முதலியார். கல்வித் துறையில் நெடுநாள் அநுபவமும், நிர்வாகத் துறையில் திறமையும், செயலாற்றலும் மிக்கவரான திரு சுந்தரவடிவேலு டாக்டர் முதலியார் விட்டுச் செல்லும் கட்டுக்கோப்பை மேலும் பலப்படுத்தி, புதுப் புதுத் துறைகளில் பல்கலைக் கழகத்தை மேலும் விரிவுபடுத்தி, சென்னை சர்வகலாசாலையின் மதிப்பை முன்னிலும் உயர்த்தப் பாடுபடுவார் என்பது நிச்சயம். புதிய உப அத்யக்ஷகருக்கு முகமன் கூறி மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம். அவருடைய பதவிக் காலம் பல்கலைக் கழகத்துக்கு மற்றொரு பொற்காலமாக விளங்குவதாக.





## நிக்ஸன் விஜயம்

1. அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸன் இந்தியாவுக்கு விஜயம் செய்தார். தாற்காலிக ஜனாதிபதி முகம்மது இதயதுல்லாவும், பிரதம மந்திரி இந்திரா காந்தியும் அமெரிக்க ஜனாதிபதியை பாலம் விமான நிலையத்தில் வரவேற்றார்கள்.
2. புது தில்லிக்கு அருகில் உள்ள சத்தர்பூர் கிராமத்தில் உயர்நிலைப் பள்ளி மாணவிகள் ஸ்ரீமதி நிக்ஸனுக்குத் திலகமிட்டுக் குதூகலத்துடன் வரவேற்றார்கள்.
3. சத்தர்பூர் கிராமத்தில் ஸ்ரீமதி நிக்ஸன் கைத்தறிப் பிரிவில் வண்ணக் கம்பளத்தைக் கண்டு வியக்கிறார்.
4. புது தில்லி லொரேட்டோ கான்வென்ட் பள்ளியின் ஆசிரியையோடு ஜனாதிபதி கைகுலுக்குகிறார். இளம் பெண்கள் மகிழ்ச்சியுடன் நிக்ஸனைச் சூழ்ந்து நிற்கிறார்கள்.







# மின்னினை அளக்க நுண்ணிய கருவிகள்

ஸிம்கோ மீட்டர் தொழிற்சாலையில் மின்சாரத்தை அளக்கும் கருவிகள் தயாரிக்கப்படுகின்றன.

"மகாத்மா காந்தி அவர்களே! நீங்கள் செய்யும் காரியங்கள் எதுவும் சரியில்லை! அடக்கி ஆள நினைப்பவர்களை அடித்து விரட்டுவதுதான் சரி!"

இப்படிப் பொருள்பட ஒருவர் தைரியமாக அண்ணலுக்குக் கடிதம் எழுதினார். அவர் தான் திரு ஆர். சுப்பராயன்.

'வீட்டிலே உட்கார்ந்து ராட்டையைச் சுற்றிக் கொண்டிருந்தால் சுயராஜ்யம் வந்து விடுமா?' என்று இளைஞர்கள் பலர் எண்ணிய காலம் அது. சுதந்திர தாகமும் புரட்சி வேகமும் ஆட்கொள்ள, நாடெங்கிலும் பலாத்காரச் செயல்களில் ஆயிரக்கணக்கான வாலிபர்கள் ஈடுபட்டனர். அத்தகையோரில் திரு ஆர். சுப்பராயன் ஒருவர். ஆனால் விடுதலை வேட்கை காரணமாக அவர் சிந்தனை ஆற்றலை இழந்துவிட வில்லை. 'எண்ணித் துணிக கருமம்' என்ற முறையில் எண்ணி எண்ணித் துணிந்தார், அண்ணலுக்கே ஒரு கடிதம் எழுத.

இந்தக் கடிதத்தை யாரோ வாலிப மிடுக்கில் எழுதியது என்று அலட்சியமாகக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டால் காந்திஜி மகாத்மாவாகி விடுவாரா? அல்லது, தன் மனத்துக்குச் சத்தியம் என்று தோன்றிய ஒரு கருத்தைத்தான் அந்த இளைஞன் வஞ்சனை இன்றி எழுதியிருக்கிறான் என்பது அடிகளுக்குப் புரியாமல்தான் போய் விடுமா? ஆகவே, அவர் சுருக்கமாகவும் பொறுமையாகவும் பதில் எழுதினார்.

மகாத்மாவிடமிருந்து பதில் கிடைத்தும் கூட சுப்பராயனுக்குச் சமாதானம் ஏற்படவில்லை. பெரியதொரு சதிச் செயலே உருவாகி விட்டது. கல்லூரியைப் பகிஷ்காரம் செய்த இளைஞர்கள் சிலர் ஒன்றாகச் சேர்ந்தார்கள்; உப்பளாறு பாலத்தை வெடி வைத்துத் தகர்த்தார்கள்! அந்த வட்டாரத்தையே அந்த வெடியோசை ஒரு கலக்குக் கலக்கியதுடன் போலீஸ் இலாகாவுக்கும் பேரதிர்ச்சியை அளித்தது.

இரண்டொரு தினங்களுக்குப் பிறகு சுப்பராயன் வீட்டுக்குக் குடும்ப நண்பர் ஒருவர் வந்தார். அவர் போலீஸ் இன்ஸ்பெக்டரானாலும் இப்போது சாதாரண உடையில் காணப்பட்டார். "உடம்பு சரியில்லை, ஓய்வு கருதி 'லீவ்' போட்டிருக்கிறேன்" என்றார்.



சிறிய தூசி படிந்திருந்தால் கூடத் தெளிவாகக் காட்டும் 'ஷாடோகிராப்' யந்திரம்.



இந்தப் பக்கம் :
1. ஸிம்கோ மீட்டர் தொழிற்சாலையின் மற்றொரு தோற்றம்.
2. ஸிம்கோ மீட்டர்.
3. சிறிய நுணுக்கமான பகுதிகளை நன்கு துப்புரவாக்கும் அல்ட்ரா சானிக் கருவி.

எதிர்ப்பக்கம் :
1. ரேடியோ டியூனிங் கன்டென்சர்கள் இணைக்கப்படுகின்றன.
2. மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ ஆர். சுப்பராயன்.
3. ஸிம்கோ மீட்டர் தொழிற்சாலையில் திட்டக் கமிஷன் அங்கத்தினர் ஆர். வேங்கடராமன் சேர்மன் ஸ்ரீ சித்ரா நாராயணசாமி.
4. பிரதான என்ஜினியர் ஸ்ரீ டி. ஆர். ராஜகோபாலன்.





அவரது உள்நோக்கம் பற்றிக் கொஞ்சமும் சந்தேகிக்காமல் அதிதிக்கு உபசாரம் செய்தார்கள். இரண்டொரு தினங்களில் சுப்பராயனுக்கு அவரது புரட்சி நண்பர் ஒருவர் எழுதிய கடிதம் இன்ஸ்பெக்டர் கையில் சிக்கி விட்டது.

வழக்கு நடந்து சுப்பராயன் கடுமையாகத் தண்டிக்கப்பட்டார். 'செல்வம் கொழிக்கும் குடும்பத்தில் பிறந்து இப்படிக் கம்பி எண்ணிக் கொண்டிருக்கிறானே' என்று தகப்பனாருக்குக் கவலை. மேல் கோர்ட்டுகளில் வாதாடித் தண்டனை ஓரளவு குறைய வழி செய்தார். மகன் திரும்பி வந்ததும் இவனைப் புரட்சி, போராட்டம் என்றெல்லாம் போகாமல் வழிக்குக் கொணர ஒரே வழி சொத்தையெல்லாம் இவன் பேரில் எழுதி வைத்து விடுவதுதான் என்று தீர்மானித்தார் தகப்பனார். "இந்தா சொத்தையெல்லாம் நீ என்ன வேண்டுமானாலும் செய்து கொள். ஆனால் ஒன்று; குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றும் வகையில் யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள். அவ்வளவுதான்" என்று கூறி முடித்து விட்டார்.

நாடு சுதந்திரம் பெற்றும் சுப்பராயனின் புரட்சி மனப்பான்மை மாறவில்லை. அது வேறு திசையில் திரும்பியது. நாட்டில் தொழில் வளம் பெருக வேண்டும், அதற்குத் தம்மாலானதைச் செய்ய வேண்டும் என்று முடிவு கட்டினார். இருந்த நிலத்தை யெல்லாம் விற்றுத் தொழில் துறையில் முதலீடு செய்யத் துணிந்தார்.

ஏறக்குறைய இதே சமயத்தில் சேஷசாயி என்ற பெயர் தமிழகத்தின் தொழில்துறை வட்டாரத்தில் மிகுந்த செல்வாக்குப் பெற்று வந்தது. தென்சென்னை மின்சார விநியோக கார்ப்பொரேஷன் பல நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் மின் வசதி அளித்ததன் மூலம் எத்தனையோ இல்லங்களில் விளக்கேற்றி வைத்தது மட்டுமல்ல, தொழில் வளம் பெருகவும் மகத்தான சேவை புரிந்தது. மின்சார விநியோகத்தை அடுத்து, அதற்கு உதவும் வகையில் — தொலைதூரங்களுக்கு மின்சாரத்தைக் கொண்டு செல்லக் கம்பிகளையும் (கண்டக்டர்) மின்சாரம் பாயும் போது விபத்துக்கள் நேராதிருக்கக் கம்பங்களின் மீது பொருத்தப்படும் பீங்கான் குப்பிகளையும் (இன்ஸுலேட்டர்) சேஷசாயி நிறுவனங்கள் தயாரிக்கத் தொடங்கின.

இந்த வளர்ச்சியின் இயல்பான அடுத்த கட்டம் மின்சாரத்தை அளக்கும் கருவிகளைத் தயாரிப்பதுதானே. இதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்ட போது இதனை அமுல்படுத்தும் பொறுப்பை சுப்பராயனிடம் விட்டு விடுவது என்று சேஷசாயி நிறுவனம் தீர்மானித்தது.

திரு சுப்பராயனை மானேஜிங் டைரக்டராகவும் திரு சித்ரா எஸ். நாராயணசுவாமியை சேர்மனாகவும் கொண்டு உருவான ஸிம்கோ மீட்டர்ஸ் ஸ்தாபனம் ஒரே

ஆண்டில் முதல் மின் அளக்கும் கருவியைத் (மீட்டர்) தயாரித்து வெளியிட்டது மட்டுமல்ல. அந்த ஒரே ஆண்டில் 'லைசென்ஸ்' பெற்ற முழு அளவுக்கும் மீட்டர்களைத் தயாரித்தளித்தது.

அண்மையில் திருச்சியில் உள்ள விம்கோ மீட்டர்ஸ் தொழிலகத்தைச் சுற்றிப் பார்க்கும் வாய்ப்புக் கிட்டிய போது என் கவனத்தை முதலில் கவர்ந்தது, அதன் ஆடம்பரமற்ற சூழ்நிலைதான்.

மூலதனமாகக் கிடைத்த பணத்தை மலைக்க வைக்கும் கட்டடத்துக்கோ டாம்பீகமான அலங்கரிப்புக்களுக்கோ செலவிடாமல் அவசியமான இனங்களில் மட்டுமே முடக்கி இருக்கிறார்கள் என்பது புரிந்தது. பகட்டோ படாடோபமோ இல்லாது பொருளும் ஒழுங்குமுறை இருந்தது. இயந்திரங்கள் உற்பத்தித்







திறனை அதிகரிக்கும் வகையில் வசதியாக வரிசையாக நிறுவப்பட்டுச் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தன.



என்னுடன் வந்து தொழிலகத்தைச் சுற்றிக் காண்பித்த பிரதான இன்ஜினீயர் திரு ராஜகோபாலன் அவர்களைக் கேட்டேன்: "சாதாரணமாக நம் வீடுகளில் மின்சார வாரியத்தினால் பொருத்தப்படும் மீட்டரில் எத்தனை பாகங்கள் இருக்கும்?"

"இருநூற்று இருபத்தைந்து நுண்ணிய பாகங்கள் தனித் தனியே தயாரிக்கப்பட்டுப் பிறகு மீட்டராக இணைக்கப்படுகின்றன" என்றார் அவர்.

இத்தனை பாகங்களில் ஏதாவது ஒன்றிரண்டு தரக் குறைவாக இருந்து விட்டால் ஒன்று மின்சார வாரியத்துக்கு நஷ்டம்; இல்லையேல் வீட்டுச் சொந்தக்காரருக்கு நஷ்டம்! மத்தளத்துக்கு இரண்டு பக்கத்திலும் அடி என்பது போல் மீட்டர்கள் ஒழுங்காக இயங்கவில்லையானால் தயாரிப்பாளர் பாடு திண்டாட்டம்தான்!

அதனால்தான் பிரிட்டனில் உள்ள முதல்தரமான மீட்டர் தயாரிப்புத் தொழிலகத்தின் (பெண்னிஸ் & பெராண்டி) ஒத்துழைப்புடன் இந்தத் தொழிலகத்தை ஆரம்பித்தார்கள்.

ஆனால் இப்படி உறுதியான, முதல்தரமான மீட்டர்களைத் தயாரித்ததில் ஒரு சங்கடம் ஏற்பட்டு விட்டது. அந்த பிரிட்டிஷ் ஸ்தாபனத்தினர் என்ன விலையில் பிரிட்டனில் தங்கள் தயாரிப்பை விற்கிறார்களோ அதைவிடச் சற்றுக் குறைவான விலைக்கே இங்கே விம்கோ மீட்டர்கள் விற்ற போதிலும் அந்த விலை, இந்தியாவில் தயாராகும் மற்ற மீட்டர்களுடன் ஒப்பு நோக்குகையில், அதிகமாகவே இருந்தது. மின்சார வாரியங்கள் விம்கோ மீட்டர்களின் தரத்தையும் உறுதியையும் தாராளமாகப் பாராட்டின; ஆனால் பணம் மட்டும் பெயரவில்லை! தரத்தைப்பற்றி யோசியாமல் மலிவு விலையில் கிடைத்த சரக்குக்கே 'ஆர்டர்' கொடுத்தார்கள்.

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் மலிவு விலையில் வாங்கிப் பொருத்தப்பட்ட மீட்டர்கள் சரியாக இயங்காது போவதால் மின்சார வாரியங்களுக்கு ஏற்படக் கூடிய நஷ்டத்தை அவை கணக்கில் எடுத்துக் கொள்வதாகவே தெரியவில்லை!

ஆகவே, இப்போது பொறியியலாளர் ராஜகோபால் மீது பெரிய பொறுப்பு சுமந்தது.

தரம் குறையக் கூடாது; விம்கோ நிறுவனத்தின் நற்பெயர் காப்பாற்றப்பட வேண்டும். ஆனால் விலை குறைய வேண்டும்! இல்லாவிட்டால் தொழிலகத்தை இழுத்து மூட வேண்டியதுதான் என்ற நிலை!

பலவிதமான ஆராய்ச்சிகளை மேற்கொண்டு மீட்டரில் பல மாற்றங்களைச் செய்து விலை கணிசமாகக் குறைய வழி கண்டார் ராஜகோபால்.

''இப்போது நீங்கள் தயாரிக்கும் மீட்டர்களின் விலை குறைந்தாலும் தரம் குறையவில்லை - என்று நீங்கள் தீர்மானமாகச் சொல்ல முடியுமா?'' என்று கேட்டேன்.

''முன்போல் அத்தனை உறுதியான மீட்டர்களை நாங்கள் இப்போது தயாரிக்கவில்லை என்றாலும் தரம் நிச்சயம் குறையவில்லை'' என்றார் ராஜகோபால்.

''அது எப்படி அவ்வளவு தீர்மானமாகச் சொல்ல முடியும்?'' என்ற போது மீட்டர்கள் வெளியே செல்லுமுன் எத்தனை விதமான சோதனைகளுக்கு உட்படுகின்றன என்பதை விவரித்தார் அவர். சூழ்நிலையின் உஷ்ணமும் ஈரப் பசையும் கட்டுப்படுத்தப் பட்ட பெரிய அறைக்குள்ளே மீட்டர்களைக் குறிப்பிட்ட நேரத்துக்கு ஓட வைத்துப் பிரத்யேக மின் கருவிகளைக் கொண்டு பரிசோதிக்கிறார்கள்.

மீட்டரின் பல்வேறு பாகங்களும் தயாராகும்போது அவற்றில் தூசி படிந்துள்ளதா என்று அவ்வப்போது பரிசோதிக்கப்படுகின்றன. மீட்டரின் ஒரு சின்னஞ் சிறு பாகத்தையும் அதில் படிந்துள்ள கண்ணுக்குத் தெரியாத தூசித் துகளையும் பல நூறு மடங்கு பெரிதாக்கி நிழல் படமாக எடுத்துக் காட்டும் கருவி இத்தொழிலகத்தில் உள்ளது. மீட்டரில் பொருத்தப்படும் நுண்ணிய பாகங்களைச் சுத்தப்படுத்த ''அல்ட்ரா ஸோனிக்'' என்று பெயர் கொண்ட ஒரு சாதனமும் இருக்கிறது. இந்த நூதனக் கருவி, வெகு வேகமாக ஒலி அலைகளை அடுத்தடுத்து எழுப்புவதன் காரணமாகவே அந்த ஒலி நம் செவிகளில் விழுவதில்லை! புலனுக்கு எட்டாத வேகத்தில் ஒலி அலைகள் எழும் போது சிறிய நுண்ணிய பாகங்களைப் பரிசுத்தமாக்கியும் விடுகிறது!

மீட்டரின் அமைப்பில் எந்தவிதமான மாறுதல்களையும் செய்யாமல் பல்வேறு பாகங்களைத் தயாரிக்க உபயோகப்படும் உலோகங்களை மட்டும் மாற்றித் தரம் குறையாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

திரு ராஜகோபாலுக்கு இளைஞராக இருந்த காலத்திலிருந்தே கல்கி பத்திரிகையிடம் ஓர் அலாதி ஈடுபாடு. 1955ல் மேல் படிப்புக்காக இவர் பிரிட்டனிலிருந்தபோது ''உலகின் எந்த மூலையிலிருந்தாலென்ன? கல்கி பத்திரிகை வேண்டும்! அதையும் நமக்கே உரித்தான வேஷ்டி உடுத்தியபடி தான் படிக்க வேண்டும்!'' என்று கடிதம் எழுதியதோடு பிரிட்டனில் இருக்கிறோம் என்ற நினைப்பே இன்றித் தமது விடுதியில் ஹாய்யாக வேஷ்டி கட்டிக் கொண்டு கல்கி படிப்பது போல் புகைப்படம் எடுத்து அனுப்பியிருந்தார். பதினைந்து வருஷங்களுக்கு முற்பட்ட கல்கி இதழ்கள் யாரிட

---

## ஓர் உயர்ந்த கலை நிகழ்ச்சி

அஸ்ஸாம் ராஜ்யத்தைச் சேர்ந்தவரான குமாரி கபலக்ஷ்மி பருவாவின் பரத நாட்டியம் ஆண்டுக்கு ஆண்டு கலை மெருகு பெற்று முழுமை அடைந்து வருகிறது என்பதை ஜூலை 20ந் தேதி அன்று கிருஷ்ணகான சபையில் நிகழ்ந்த அவருடைய பரத நாட்டிய-அபிநய நிகழ்ச்சி தெளிவுபடுத்தியது. கலாக்ஷேத்திரத்தில் ஐந்து ஆண்டுகள் பரதம் பயின்று பட்டம் பெற்று, ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் நடன — நாடகங்களில் பங்கு கொண்டு இக்கலையைப் பேணி வருவதால் அவருடைய நடனங்களில் கலாக்ஷேத்திர முத்திரை நன்கு பதிந்திருக்கிறது. நிருத்ய அம்சங்களில் தாளக் கட்டும், ஜதி அழகும், அபிநயங்களில் முத்திரைகளின் பரிசுத்தமும் பாவங்களின் எழிலும் நிரம்பியிருந்தன. ''வாணி பொருந்து'' என்ற கானடா ராக ஜாவளியும், ஆனந்த பைரவியில் அமைந்த அஷ்டபதியும், காம்போஜியில் ''பாலவினவே'' பதமும் முழு சோபையுடன் பிரகாசித்தன. தெலுங்கு மொழியில் அமைந்த உருப்படிகளின் அர்த்தபுஷ்டியை வேற்று மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட குமாரி கபலக்ஷ்மி பருவா அபிநயங்களின் மூலம் வெளிப்படுத்தியது மிகவும் பாராட்டத்தக்கது. பின்னணி இசை, பரத நாட்டிய நிகழ்ச்சிகளுக்கு எப்படி அமைந்திருக்க வேண்டும் என்பதற்கு லட்சியம்போலத் திகழ்ந்தது. மொத்தத்தில் ஓர் உயர்ந்த கலை நிகழ்ச்சி.



—எம். எஸ். செல்லசாமி

# தோழமை யோகம் பற்றி காஞ்சி ஆசார்யாளுடைய மகிழ்ச்சி

**ஸ்ரீ ராஜாஜி அவர்களுக்கு,**

அனந்த நமஸ்காரங்கள்,

நேற்று ஸ்ரீ காமகோடி பெரியவர்களிடம் சென்றிருந்தேன். 'தோழமை யோகம்' சமர்ப்பித்தேன்.

கடந்த இரண்டு மாதங்களாக மவுனம் அனுஷ்டித்து வரும் ஆசாரியர்கள், இப்போதுதான் சிறிது சைகைகள் காட்டுகிறார்கள். புத்தகத்தைப் பிரஸன்னமாக ஏற்றுக் கொண்டு, காமாக்ஷியம்பிகைக்கு அர்ச்சனை செய்துவிட்டு மறுபடி வரச் சொல்லி ஜாடையிலேயே தெரிவித்தார்கள். அவ்விதமே அர்ச்சனை செய்து திரும்பினேன். அந்த இடைக்காலத்திலேயே ஸ்ரீ ஆசாரியர்கள் 'தோழமை யோகம்' முழுவதும் படிக்கச் சொல்லிக் கேட்டார்களாம். சில பகுதிகளை இரண்டு முறை படிக்கச் சொல்லிக் கேட்டார்களாம். 'மிகுந்த மலர்ச்சியுடன் கேட்டார்' என்று நூலைப் படித்துக் காட்டிய ஸ்ரீ அனந்தானந்த ஸ்வாமிகள் தெரிவித்தார். நான் காமாக்ஷி தரிசனத்துக்குப் பின் ஸ்ரீ பெரியவர்களிடம் விடைபெறச் சென்ற போது மந்தஹாஸத்துடன், புத்தகம் படித்துத் தாம் கேட்டதாக ஜாடையிலேயே தெரிவித்தார்கள்.

அனந்த ப்ரணாமங்கள்,

26–7–69 ரா. கணபதி

---

மாவது இருந்தால் புரட்டிப் பாருங்கள்; அந்தப் படம் அகப்படும்!

ராஜகோபாலின் மேற்பார்வையிலும், சுப்பராயன் நிர்வாகத்திலும் ஸிம்கோ மீட்டர்ஸ் ஸ்தாபனம் புதிய திசைகளிலும் கிளை விட்டுப் படரத் தொடங்கி இருக்கிறது. டிரான்ஸிஸ்டர் ரேடியோக்களுக்கு இன்றியமையாத தேவையான டியூனிங் கண்டென்ஸர்களைத் தயாரிக்கத் தொடங்கியிருக்கிறது. இப்பகுதிக்குள் நுழைந்தால் ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட பெரிய அறையில் ஒரு நீண்ட மேஜையைச் சுற்றி ஆண்களும் பெண்களுமாகப் பலர் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருப்பார்கள். ரேடியோ டியூனிங் கண்டென்ஸரில் ஒரு சிறு துரும்பு இருந்தாலும் போதும், அது ரேடியோவின் இயக்கத் திறனை வெகுவாகப் பாதிக்கும். அதனால் ஒரு கேசக் கருவோ வேறு தூசியோ விழுந்து விடாதிருக்க மிகுந்த முன்னேற்பாடு. காலணிகளைக் கழற்றி விட்டு வேறு காலுறைகள் அணிந்து இந்த அறைக்குள் அடியெடுத்து வைக்கிறார்கள். இங்கு பணியாற்றும் பெண்மணிகள் குங்குமம் இட்டுக் கொள்ளக் கூடாது என்றுகூட இந்தப் பகுதியை நிறுவ உதவிய ஜெர்மானிய நிபுணர்கள் விடாப்பிடியாக உத்தரவு போட்டு விட்டார்கள் — குனிந்து வேலை செய்யும் போது குங்குமத் துகள் உதிரலாம் என்பதால்! அப்புறம் அவர்களிடம் வாதாடிச் சாந்துப் பொட்டு வைத்துக் கொள்ளச் சம்மதம் பெற வேண்டியிருந்தது. இப்போது பெண்மணிகள் குங்குமம் அணிந்து வந்தாலும் இந்த அறைக்குள் நுழையுமுன்னர் வெளியே உள்ள கண்ணாடியில் அழகு பார்த்துக் கொள்ளலாம். அப்போது சாந்துப் பொட்டை வைத்துக் கொண்டு குங்குமத்தை எடுத்துவிட வேண்டும். வீடு திரும்பும் போது மறுபடியும் குங்குமத் திலகம் இட்டுக் கொண்டு செல்லலாம்!

சில வீடுகளில் மின்சாரம் அதிகமாகச் செலவாகும். நீர் இறைக்கும் இயந்திரம், ஏர்-கண்டிஷனர் என்று இப்படிப் பல கருவிகளை வைத்திருப்பார்கள். இவர்களுக்கு மின்சார வாரியம் மும்முனை மின் இணைப்பைத் தரும். இதற்கென விசேஷ மும்முனை மீட்டர்களையும் ஸிம்கோ தயாரிக்கிறது. பயன்படுத்தப்படும் மின்சாரத்தின் அளவினை மட்டுமல்லாது குறிப்பிட்ட நேரத்துக்குள் தேவைப்படும் அதிகபட்ச மின் சக்தியை அளக்கும் கருவிகளும் இங்கு தயாராகின்றன. சில பெரிய தொழிலகங்களில் குறிப்பிட்ட கால அளவில் அதிகபட்சம் எந்த அளவுக்கு மின் சக்தி தேவைப்பட்டிருக்கிறது என்பதை மின்சார வாரியங்கள் அறிந்து கொள்ள இந்த மீட்டர்கள் உதவுகின்றன. இத்தகைய மீட்டர்களை இந்தியாவில் முதன் முதலாகத் தயாரித்தவர்கள் ஸிம்கோ ஸ்தாபனத்தினர்தான்.

இந்தத் தகவலை ராஜகோபால் தெரிவித்ததும் சுப்பராயன் கூறினார்: "இப்படி இந்தியாவிலேயே ஒரு கருவியைத் தயாரிக்க ஆரம்பித்து விட்டோம் என்று சொன்னால் இந்தக் காலத்தில் சந்தோஷப்படுகிறவர்கள் ரொம்பக் குறைவு. 'கெட்டுது, போ! அதையும் இந்தியாவிலேயே தயாரிக்க ஆரம்பிச்சுட்டீங்களா?' என்று விசனத்துடன் அலுத்துக் கொள்கிறார்கள்!"

இந்த எண்ணம் மாறி மக்கள் பெருமைப்படும் சூழ்நிலை ஏற்பட ஸிம்கோ தன் பங்கை ஒழுங்காக, உண்மையாக நிறைவேற்றி வருகிறது என்பதில் மாதமொன்றுக்குப் பன்னிரண்டாயிரம் மீட்டர்களைச் செய்து குவிக்கும் ஸிம்கோ தொழிலகத்தைப் பார்வையிட்டு வரும் எவருக்கும் சந்தேகம் இராது!

— வி. ராஜேந்திரன்

# பக்கத்து வீட்டுப் பிரமுகர்

'சார்டர்ட் அக்கவுண்டென்'டாகப் பணி புரியும் கண்ணன் அவர்கள் பக்கத்து வீட்டுப் பிரமுகரான கி. வா. ஜ. வைப் பற்றிக் கணக்குப் பார்த்துப் பேசாமல் மனம் விட்டுச் சொல்கிறார் : ★

எங்கள் நட்புக்கு அஸ்திவாரம் அபிப்பிராய பேதத்திலேயிருந்துதான் தோன்றியது. இப்போது சொந்த வீடுகளில் அக்கம் பக்கத்தினராக இருப்பது போல் பல வருஷங்களுக்கு முன் இதே தெருவிலே மறு முனையில் பக்கத்துப் பக்கத்து வீடுகளில் இருந்தோம். அப்போது கி. வா. ஜ. வுக்குப் பஜனையில் ஈடுபாடு உண்டு. வாரத்தில் பல நாட்களில் அவர் வீட்டு மாடியில் இரவு வெகு நேரம் வரை பஜனை நடக்கும். எனக்குத் தூக்கம் கெடும். இதை நான் வாய்விட்டே பல தடவை கூறி என் ஆட்சேபணையை வெளிக் காட்டியிருக்கிறேன். ஆனால் கி. வா. ஜ. அவர்கள் இருந்த வீட்டுக்குச் சொந்தக்காரரே இந்தப் பஜனைச் சத்தத்துக்குக் கண்டனக் குரல் எழுப்பித் தடையும் செய்ய முற்பட்டபோது, என் ஆட்சேபணை அபிமானமாக மாறிவிட்டது. அவருடைய பஜனைக் கோஷ்டிக்கு என் வீட்டிலேயே இடம் கொடுக்கத் துணிந்து விட்டேன். நானும் அதில் ஈடுபாடு காட்ட ஆரம்பித்தேன்!

இப்போதெல்லாம் அவர் அதிகமாகப் பஜனை நாமாவளியில் கலந்து கொள்வதில்லை. பக்தி மற்றும் இலக்கியப் பிரசங்கங்களுக்குப் போவதற்கே உள்ளூரிலும் வெளியூரிலும் அவருக்கு நேரம் போதவில்லை.

திடீரென்று சில நாள் ராத்திரி கி.வா.ஜ. இசையிலே லயித்து இரைந்து பாட ஆரம்பித்து விடுவார். அதற்கு இரண்டே இரண்டு பொருள்கள்தாம் உண்டு. ஒன்று அவருக்கு உடல் நலம் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கும். அல்லது எழுதுவதற்கு விசேஷமான கற்பனை ஏதும் தோன்றியிருக்க வேண்டும்.

இந்த மனிதருக்கு எந்த நோய்க்கும் எந்த மருந்தும் சாப்பிடக் கூடாது என்ற பிடிவாதம் உண்டு. நாங்கள் என்ன சொன்னாலும் மறுத்து விடுவார். ரொம்ப அபூர்வமாக ஓரிரண்டு சந்தர்ப்பங்களிலே மருந்து சாப்பிட்டிருக்கிறாரோ என்னவோ?

இவர் வீடு தினசரி கல்யாணச் சத்திரம் பட்ட பாடுபடும். இவர் ஊரில் இருந்தாலும் அப்படித்தான்; இல்லாதபோனாலும் அப்படித்தான்! சென்னையைத் தாண்டி பம்பாய், கல்கத்தா என்று போகும் நண்பர்களோ, வடக்கே இருந்து தெற்கே சொந்த ஊருக்குப் போகும் அன்பர்களோ, இவர் வீட்டுக்கு வந்து ஒரு நாளாவது முகாமிட்டுத்தான் புறப்படுவார்கள். பக்கத்து வீடு நிசப்தமாக இருந்தால்தான் என்னமோ ஏதோ என்று எங்களுக்குக் கவலை ஏற்படும்.



கண்ணன் — கி. வா. ஜ.

ஒரு சந்தர்ப்பத்தில் நாங்கள் எல்லாம் கவலைக்குள்ளானபோது இந்த மனிதர் கொஞ்சம் கூடச் சஞ்சலத்துக்கோ சலனத்துக்கோ இடம் கொடுக்காமல் அமைதியாக இருந்ததையும் சொல்கிறேன்.

மறுநாள் இவருடைய இரண்டு புதல்வர்களுக்கும் பூணூல் போடுவதாக நிச்சயித்திருந்தார். முதல் நாள் முன்னிரவு வேளையில் இவருடைய சிறிய பையன் முருகன் காணாமற் போய்விட்டான். கையில் தங்கக் காப்புகள் வேறு இருந்தன. நாங்கள் எல்லோரும் பதறினோம்; தேடினோம். இவர் கொஞ்சம்கூடப் பதற்றப்படாமல் 'குழந்தை தானாகவே வந்து சேருவான்' என்று சொல்லி விட்டுத் தம் காரியங்களில் வழக்கம் போல் ஈடுபட்டிருந்தார். போலீஸுக்குத் தகவல் கொடுத்துவிட்டுத் திரும்பினோம்.

நள்ளிரவுக்குப் பிறகு போலீஸ் காவலர் ஒருவர் குழந்தையை



வீட்டுக்கு அழைத்து வந்தார். அந்தப் பையன் முதல் நாள் இரவில் அந்தப் பக்கமாகப் போன கல்யாண ஊர்வலத்தை வேடிக்கை பார்த்து நின்று 'அத்துடன் சேர்ந்து கல்யாண வீட்டுக்கே போய்விட்டான். அங்கேயேவிளையாடினான், சாப்பிட்டான். பிறகு தான் அவனுக்கு வீட்டு நினைவு ஏற்பட்டு அழுகையும் வந்திருக்கிறது. கல்யாண வீட்டார் அக்கம் பக்கத்தில் விசாரித்து விட்டுக் கடைசியில் போலீஸுக்குத் தகவல் கொடுத்தார்கள். நாங்கள் தேடிக் கொண்டிருப்பது ஏற்கனவே போலீஸுக்குத் தெரியுமாதலால், பையன் பத்திரமாக வீடு திரும்பினான். ''பார்த்தீர்களா! நான்தான் அப்போதே சொன்னேனே!'' என்றார் கி. வா. ஜ. நிதானமாக.

காஞ்சிப் பெரியவர் நம்ப கி. வா. ஜ.வை மெய்சிலிர்க்க வைத்த நிகழ்ச்சி ஒன்றும் எனக்குத் தெரியும். ஒரு சமயம் பெரியவர் இந்தப் பகுதிக்கு விஜயம் செய்திருந்த போது அவருக்குச் சின்னஞ் சிறு பொற்காசுகளைக் கொண்டு கனகாபிஷேகம் செய்து கண் குளிரப் பார்க்க வேண்டுமென்று விரும்பினோம். கி. வா. ஜ. முன்னின்று பக்த கோடிகளிடம் நிதி வசூலித்துவிட்டுப் பெரியவரிடம் விவரத்தைத் தெரிவித்தபோது அவர் ''ஆகா! செய்யலாம்! நான் சந்திரமௌளீசுவரருக்கே செய்து விடுகிறேன். 'ருத்ர த்ரிசதி' யாகவே செய்யலாம்'' என்று சொல்லி விட்டார்.

பக்தகோடிகளுக்குப் பெரியவருக்கு அபிஷேகம் செய்து பார்க்க முடியாமற் போகிறதே என்ற ஏக்கம். அதை மறைத்துக் கொண்டார்கள். அவர்கள் ஏற்பாடு செய்திருந்த அபிஷேகத்துக்குச் சுமார் இருநூற்றி இருபது பொற்காசுகள் போதும். ஆனால் பெரியவர் குறிப்பிட்ட 'ருத்ரத்ரிசதி'க்கு முந்நூறு காசுகள் வேண்டும். இன்னும் எண்பது காசுகளை மறு நாள் பகல் நேரத்துக்குள் தயாரித்தாக வேண்டும் என்ற பிரச்னையும் கூடவே எழுந்தது. அதைச் சமாளிக்கவும் கி. வா. ஜ. அவர்களே முன்வந்தார்.

ராமநாதன் என்ற அன்பரிடம்தான் இந்தப் பொற்காசுகள் தயாரித்துக் கொடுப்பதற்கான யந்திர வசதிகள் உண்டு. அவர் ஒத்துழைத்தால்தான் மறு நாள் நடுப்பகல் பூஜை வேளைக்கு அந்தக் காசுகள் கிடைக்கும். ஆனால் அதற்குச் சிரமமும் அதிகம். தங்கம் வாங்கி உருக்கித் தகடாக்கிப் பிறகு முத்திரை பதித்து வெட்ட வேண்டும்.

ராமநாதன் இந்த அவசரத்தில் தம்மால் இந்தக் காரியத்தை மேற்கொள்ள இயலாது என்று எவ்வளவோ வாதாடியும் கி. வா.ஜ. அவரை ஒப்புக் கொள்ள வைத்தார். ஆனால் அதிகப்படியான தங்கக் காசுகள் தயாராகி வந்த பாடில்லை.

பெரியவர் இருக்கும் பொற் காசுகளைக் கொண்டே கனகாபிஷேக பூஜையை முடித்தார். பக்தர்களுக்குப் பிரசாதம் விநியோகிக்க ஆரம்பித்தார். அப்போதுதான் ராமநாதன் அனுப்பிய பொற்காசுகள் வந்து சேர்ந்தன. பெரியவர் இதைக் கவனித்து விட்டார். கி.வா. ஜ.வைநோக்கி, ''இந்தா! அந்தக் காசுகளைக் கொண்டு நீயே எனக்கு அபிஷேகம் செய்துவிடு'' என்றார் சிரித்தபடியே! தாமதமாக வந்த பொற்காசுகள் பக்தர்களின் ஏக்கத்தைத் தவிர்த்த தோடல்லாமல், கி. வா. ஜ.வை மெய் சிலிர்க்க வைத்தது. இன்றும் அவர் அதை நினைத்துப் புளகாங்கிதம் அடைவார்.

வெளியூர்களுக்குப் போய்விட்டுப் பாதி ராத்திரி நேரத்தில் கூட வீடு திரும்புவார். அதற்காக ஊரில் இருக்கும் நாட்களில் சினிமா நாடகம் என்று அவர் போவதில்லை. அவைகளில் அவருக்கு ஈடுபாடு கிடையாது. ஒரு சமயம் இவர் தொடர்ந்து சில நாட்கள் தூக்கம் வராமல் சிரமப்பட்டார். டாக்டர் இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்தாற் போல் சினிமாப் படங்களைப் பார்த்தால் நலம் என்று யோசனை சொன்னார். இவரும் போனார். ஆனால், இவர் கண்களுக்கும் காதுகளுக்கும் பொருட் குற்றமும், சொல் குற்றமுமே தெரிந்தன. படத்தை ரசிக்க முடியாமல் வந்து விட்டார். இத்தனைக்கும், இவரைப் பல படத் தயாரிப்பாளர்கள் ஹிந்து சமயம் சம்பந்தப்பட்ட படங்கள் எடுக்கும்பொழுது டெலிபோன் மூலமே சந்தேகங்களைத் தெளிவுபடுத்திக் கொள்கிறார்கள். தமிழன்பர்கள், மாணவர்கள், எல்லோருமே இவருடன் டெலிபோனில் தங்கள் இலக்கண இலக்கிய சந்தேகங்களைப் போக்கிக்கொள்கிறார்கள். இவர் வீட்டில் சதா டெலிபோன் மணி ஒலிக்கும்.

இவருக்கு வேப்ப மரத்து மேலே அலாதிப் பிரீதி! எந்த வீட்டில் இருந்தாலும் அங்கே வேப்ப மரம் வளர்க்க ஆரம்பித்து விடுவார். இப்போது பக்கத்து வீட்டிலே கூட அவர் வைத்த வேப்பங் கன்று பெரிய மரமாகி விட்டது. வேப்பம் நிழல், வேப்பம் காற்று, இலை மூன்றுமே இவருக்குத் தேவை. இப்போதுதான் கொஞ்ச நாட்களாக இவர் வேப்பிலை சாப்பிடுவதில்லை. முன்பெல்லாம் தினசரி அது கொஞ்சம் உள்ளே போகும்.

இவர் அறையில் இரண்டே இரண்டு குருநாதர்கள் படம்தான் இடம் பெற்றிருக்கின்றன. ஒருவர் முதியவர், மற்றவர் இளைஞர். ஆம்! ஒரு படம் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதய்யருடையது. மற்றொரு படத்தில் இவருடைய இஷ்ட தெய்வமான பால முருகன் காட்சி யளிக்கிறார்.

இந்த மந்தைவெளிப் பகுதியிலே 'அண்ணா' என்றால் அந்தப் பதம் உடனே கி. வா. ஜ.வை நினைவுபடுத்தும். 'மந்தைவெளி அண்ணா' என்று அன்பர்களும் நண்பர்களும் அவரைக் குறிப்பிடுவார்கள்.

பேட்டி : **கோமதிஸ்வாமிநாதன்**

# பசும் பொன்



ஆங்கிலப் பேராசிரியர் சாம்பசிவம் 'விவாகரத்து' விருந்துக்குப் போய்க் கையில் தேங்காய்ப் பையுடன் வீட்டுக்குத் திரும்புகிறார்!

''என்ன! தேங்காய்ப் பையோடு வருகிறாய்? கல்யாணமா?'' என்று கேட்கிறாள், அவரது அக்கா அலமு.

''இல்லே, டைவோர்ஸ்! எங்க காலேஜ் லெக்சரர் ஒருவர் புதுசாக் கல்யாணம் பண்ணிண்டவன் இப்போ 'டைவோர்ஸ்' பண்ணிண்டுட்டான்! அதற்குக் கொண்டாட்டம்!'' என்று சொல்லிப் பேராசிரியர் தேங்காய்ப் பைக்குள்ளிருந்து உடைந்த இரண்டு தேங்காய் மூடிகளையும் அரிந்த ஆரஞ்சுப் பழத்தையும் எடுத்து வைத்து, ''குடும்பம் பிரிஞ்சு போச்சுன்னு இதிலே நன்னாக் காண்பிச்சுட்டானே? என்ன ஐடியா! என்ன ஐடியா!'' என்று குதிக்கிறார்.

ஆங்கிலப் பேராசிரியராக வருபவர் பழம் நடிகர் சாரங்கபாணி. தம் இயற்கையான நடிப்பினால் அனைவரையும் கவர்கிறார்.

நாடகமும் கதையும் ஒன்றோடொன்று ஒட்டாது, உடைந்த தேங்காயாக, அரிந்த ஆரஞ்சாக இருப்பதை சாரங்கபாணி சொல்லாமல் சொல்லி விளங்கவைக்கிறாரோ? பாட்டி வேஷத்தில் வலம்புரி நாகராஜன் நன்றாக நடித்தாலும் கதைக்குச் சம்பந்தமில்லாத பாத்திரம் அலமுப் பாட்டி!

'பசும் பொன்'னில் ராகவனும் கந்தசாமியும் இணை பிரியாத இரு உயிர் நண்பர்கள். ராகவன் வஸந்தாவைக் காதல் திருமணம் புரிந்த பிறகு, நட்புக்குப் பங்கம் விளைவிக்கும் முயற்சிகள் அனந்தமாக நடைபெறுகின்றன. அவற்றைத் தவிர்த்துக் கந்தசாமி உண்மை நட்புக்கு இலக்கியமாகத் திகழ்ந்து இலக்கணம் வகுக்கிறார்.

கலாலயம் நடத்தும் குமாரி கலாவதியாக வரும் வி. டி. ராஜகாந்தம் நடன பாணியிலே நடக்கிறாள்! கந்தசாமியின் மாமா 'கம்யூனல்' விஷம்.

சாரங்கபாணி, வி. டி. ராஜகாந்தம், வலம்புரி நாகராஜன், சின்னி கணேசன், கனகதுர்க்கா இவர்களின் நடிப்பில் பசும் பொன்னைக் காணலாம்.

## ★ ★ ★ ★ ★ ★ ★ தேவை ஒரு காதலி ★ ★ ★ ★ ★ ★ ★

ஒரு நாள் மாலைப் பொழுதைக் கவலைகளை மறந்து விச்ராந்தியாகக் கழிக்க ஒரு நாடகம் பார்க்கத் தீர்மானிக்கிறோம். அப்படியானால் அந்த நாடகத்தில் என்ன எதிர்பார்ப்போம்? **நகைச்சுவை:** அது இந்த நாடகத்தில் இருக்கிறது. நகைச் சுவை நாடகம் என்றே விளம்பரம் செய்கிறார்கள். நகைச் சுவை எழுத்தாளர் என்று நல்ல பெயர் எடுத்த ராஜேந்திரகுமார் எழுதிய நாடகம். நகைச் சுவை நடிகர் தங்கவேலு இதில் நடிக்கிறார். **கதை:** ஏதோ ஒரு ஹாலிவுட் திரைப் படத்திலிருந்து கடன் வாங்கியதுதான் என்றாலும் கதை இருக்கிறது. ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். **நடிப்பு:** ஆகா, தங்கவேலு இருக்கிறாரே பிரமாதமாக நடிக்கிறார். அவருக்குப் (ஜமீன்தார்) பணிபுரிய வரும் பட்லராகத் தோன்றும் பாலாஜியும் சளைக்காமல் போட்டி போடாக நடிக்கிறார். **கவர்ச்சி:** குறைவில்லை. கவர்ச்சிக்கென்றே வந்து போகிறார் ஆர். வாணி. **டைரக்ஷன்:** சாம்பு என். எஸ். நடராஜன் டைரக்ஷன் பிரசித்தி; கேட்க வேண்டுமா என்ன?



இவ்வளவிருந்தும் நாடகம் சோபிக்கவில்லை என்றால் அதில் நாடகம் இல்லாத குறைதான்!

மதுவிலக்கு அமுலில் இருக்கும் தமிழ் நாட்டில் 'கட்டுவிடுவேன்' என்று மிரட்டி (தமாஷ் நாடகம் தான் என்றாலும்) ஜமீன்தார் இரு வாலிபர்களை மது அருந்தச் செய்வதாகக் காட்டுவது சரிதானா?

நாடகத்தில் நகைச்சுவை பிரதானமாக அமையலாம். ஆனால் அது நையாண்டி (Satire) நகைச் சுவையாக இருக்க வேண்டும். அப்படி இல்லையானால் வெறும் சம்பவங்களை வைத்தே நகைச்சுவையைச் சிருஷ்டிப்பதானால் - அதற்கு ஈடுகட்டுவது போல உணர்ச்சிமயமான கட்டங்கள் ஒன்றிரண்டாவது இருந்தால்தான் நகைச்சுவையும் எடுபடும். தயிர் சாதம் போட்டு ஊறுகாய் வைக்க மறந்துவிட்டால்?

இதையெல்லாம் ஈடுகட்டிக் கொண்டு போகிறார் தங்கவேலு. நடிக்கிறோம் என்ற நினைப்பே இல்லாதவர் போல ரொம்ப அமைதியாக ஹாஸ்யமான வசனங்களை அள்ளித் தெளிக்கிறார். அலட்டிக் கொள்ளாமல் அவர் நடிப்பதைக் கண்டு நாம் அடக்க மாட்டாமல் சிரிக்கிறோம்.

தேவை ஒரு காதலி என்ற இந்த நாடகத்துக்குத் தேவை: ஒரு நாடகம்.



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் நாற்பத்துமூன்று

## "நான் குற்றவாளி!"

"சமுத்திரகுமாரி! உனக்கு என்னை நினைவிருக்கிறதா?...."

"பொன்னியின் செல்வ! இது என்ன கேள்வி! யாரைப் பார்த்து 'நினைவிருக்கிறதா?' என்று கேட்கிறீர்கள்? ஆயிரமாயிரமாயிரம் ஆண்டுகள் கலந்து பழகிய பின்னர் 'நினைவிருக்கிறதா?' என்று கேட்பது தருமமா? அல்லது தங்களுக்குத் தான் நினைவில்லாமல் போய் விட்டதா? எத்தனை நாள், எத்தனை யுகம் என்னுடைய சின்னஞ் சிறு படகில் தாங்கள் ஏறி வந்திருக்கிறீர்கள்? கடலில், முடிவில்லாத கடலில், எல்லையில்லாத வெள்ளை அலைகளுக்கிடையில், நாம் இருவரும் என் சிறு படகில் ஏறிக் கொண்டு உல்லாச யாத்திரை செய்ததையெல்லாம் மறந்து விட்டீர்களா? திடீரென்று நாலாபுறமும் கரிய இருள் சூழ்ந்து வர, நாம் இருவரும் ஒருவருக்கொருவர் துணையாக, ஒருவர் கரத்தை ஒருவர் பற்றிக் கொண்டு நெடுங் காலம் நின்றதை மறந்து விட்டீர்களா? பயங்கரமான புயற்காற்று அடித்தபோது, மலைமலையாக எழுந்த பேரலைகள் நம்முடைய படகைத் தாக்கி, ஒருகணம் நம்மை வானமண்டலத்துக்கு உயர்த்தி, மறுகணம் பாதாளத்தில் அமுத்தி, இப்படியெல்லாம் அல்லோலகல்லோலம் செய்த நாட்களில், நாம் இருவரும் ஒருவருக்கொருவர் ஆதாரமாக நின்று அக்கொடும் புயலை எதிர்த்து வென்றதை மறந்துவிட்டீர்களா? ஒரு சமயம் நாம் வான வெளியில் பறந்து பறந்து பறந்து சென்று கொண்டிருந்தோமே, அதை மறந்து விட்டீர்களா? விண்மீன்களைத் தாங்கள் தாவிப் பிடித்து என் தலையில் ஆபரணங்களாகச் சூட்டினீர்களே, அதுவும் மறந்து விட்டதா? பூரண சந்திரனை என் முகத்தருகில் கொண்டு வந்து, 'இதோ இந்த வெள்ளித் தகட்டில் உன் பொன் முகத்தைப் பார்!' என்று சொல்லிக் காட்டினீர்களே, அதையும் மறந்து விட்டீர்களா? மற்றொரு சமயம் ஆழ்கடலில் தாங்கள் மூழ்கினீர்கள்; நான் உள்ளம் பதை பதைத்து நின்றேன்; சற்று நேரத்துக்கெல்லாம் இரண்டு கைகளிலும் முத்துக்களையும் பவழங்களையும் எடுத்துக் கொண்டு வெளி வந்து அவற்றை மாலையாகக் கோத்து என் கழுத்தில் சூட்டினீர்கள்! அதைத் தாங்கள் மறந்து விட்டாலும் நான் மறக்க முடியுமா? அரசே! உச்சி வேளைகளில், நீல நிற நீர் ததும்பிய ஏரிக் கரைகளில், பூங்கொத்துக்களின் பாரம் தாங்காமல் மரக் கிளைகள் வளைந்து வந்து அலங்காரப் பந்தல் போட்ட இடங்களில், பசும் புல் பாய்களில், நாம் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவண்ணம் எத்தனை எத்தனை எத்தனையோ நாட்கள் கழித்தோமே, அதையெல்லாம் மறந்துவிட முடியுமா? அந்த நேரங்களில் மரக் கிளைகளில் நூறு ஜோடிக் குயில்கள் உட்கார்ந்து கீதம் இசைத்ததையும், ஆயிரம் பதினாயிரம் வண்டுகள் சுற்றிச் சுற்றி வந்து ரீங்காரம் செய்ததையும், கோடி கோடி பட்டுப் பூச்சிகள் பல வர்ணச் சிறகுகளை அடித்துக் கொண்டு ஆனந்த நடனம் ஆடியதையும் நான் என்றேனும் மறக்க முடியுமா? எத்தனை ஜன்மங்களிலும் மறக்க முடியுமா? என்னைப் பார்த்து 'நினைவிருக்கிறதா?' என்று கேட்டீர்களே, அப்படிக் கேட்கலாமா?



நினைவிருக்கிறது, ஐயா, நன்றாக நினைவிருக்கிறது !...''

இவ்வாறெல்லாம் சொல்ல வேண்டும் என்று அந்தப் பேதைப் பெண்ணின் உள்ளம் துள்ளித் துடித்தது.

ஆனால் அவளுடைய பவள இதழ்களோ ''நினைவிருக்கிறது!'' என்ற இரு சொற்களை மட்டுமே முணுமுணுத்தன.

''ஆகா! சமுத்திர குமாரி! நீ வாய் திறந்து பேசுகிறாயே! இந்த அதிசயமான இலங்கைத் தீவிலே உள்ள எத்தனையோ மணிமாட மண்டபங்களின் தூண்களில் அழகிய தேவ கன்னிகைகளின் சிலைகளை அமைத்திருக்கிறார்கள்! ஒரு வேளை அத்தகைய சிலை வடிவமோ நீ என்று நினைத்தேன். நல்ல வேளையாக நீ வாய் திறந்து பேசுகிறாய். இன்னும் சில வார்த்தைகள் சொல்! உன் இனிய குரலைக் கேட்க எனக்கு எவ்வளவோ ஆசையாயிருக்கிறது. நம் சேநாதிபதியிடம் நீ சில விஷயங்களைச் சொன்னாயாம். தொண்டைமான் நதியில் இரண்டு பெரிய மரக்கலங்கள் வந்து மறைவான இடத்தில் ஒதுங்கியிருப்பதாயும் அவை நிறையப் போர் வீரர்கள் வந்திருப்பதாயும் சொன்னாயாம். அது உண்மைதானே, சமுத்திர குமாரி? அந்தக் கப்பல்களை உன் கண்களினால் நீயே பார்த்தாயா ?'' என்று இளவரசர் கேட்டார்.

'' ஆம், ஐயா, என் கண்களினால் பார்த்தேன் !'' என்றாள் பூங்குழலி.

''ஆகா! இப்போது கொஞ்சம் உன் குரலைக் கேட்க முடிகிறது. என் செவிகள் இன்பமடைகின்றன. நல்லது; மரக்கலங்களைப் பார்த்ததும் நீ உன் படகை ஒரு குறுகிய கால்வாயில் விட்டுக் கொண்டு போனாய். கப்பல்கள் போகும் வரையில் காத்திருப்பதற்காக அடர்ந்த காட்டினுள் புகுந்து மறைவான இடத்தில் படுத்துக் கொண்டிருந்தாய். அச்சமயம் கப்பல்களிலிருந்து இறங்கிய வீரர்கள் சிலர் அங்கே வந்தார்கள். நீ படுத்திருந்த இடத்துக்குப் பக்கத்தில் அவர்கள் நின்று பேசிக் கொண்டார்கள். அவர்கள் பேச்சை ஒட்டுக் கேட்க வேண்டும் என்று நீ விரும்பவில்லை. உன் விருப்பமில்லாமல் அவர்கள் பேச்சு உன் காதில் விழுந்தது. நீ கேட்கும்படி நேர்ந்தது. இவை யெல்லாம் நம் சேநாதிபதியிடம் நீ கூறியவை தானே ?''

'' நடந்ததை நடந்தபடியே கூறினேன்.''

''அவர்களுடைய பேச்சைக் கேட்டதும் அதைப் பற்றி உடனே சேநாதிபதியிடம் எச்சரிக்கை செய்ய வேண்டும் என்று உனக்குத் தோன்றியது. வீரர்கள் அப்பால் போன உடனே நீ புறப்பட்டாய்; சேநாதிபதி இருக்குமிடத்தைத் தேடிக் கொண்டு விரைந்து வந்தாய்! எப்படி வந்தாய், சமுத்திர குமாரி !''

''பாதி வழி படகில் வந்தேன்; பிறகு காட்டு வழியில் நடந்து வந்தேன்.''

''எங்கே போகும் உத்தேசத்துடன் கிளம்பினாய், அம்மா ?''

''சேநாதிபதி மாதோட்ட நகரில் இருப்பார் என்று எண்ணி அங்கே போகும் உத்தேசத்துடன் வந்தேன். வழியில் மகிந்தலேயில் இருப்பதாக அறிந்தேன். சேநாதிபதியைப் பார்த்துச் சொல்வதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது. எத்தனை பேர் குறுக்கே நின்று தடுப்பது?'' என்று சொல்லிப் பூங்குழலி சேநாதிபதி நின்ற பக்கம் நோக்கினாள். அவளுடைய பார்வையில் கோடை காலத்து இடி முழக்கத்துக்கு முன்னால் தோன்றும் மின்வெட்டு ஜொலித்தது.

''சேநாதிபதியைப் பார்ப்பது என்றால் இலேசான காரியமா ? இதோ நிற்கும் என் சிநேகிதர் உன்னைப் போலவே சேநாதிபதியைப் பார்க்க முயன்று அடைந்த கஷ்டத்தைக் கேட்டால் நீ ஆச்சரியப்பட்டுப் போவாய். தடைகளைப் பொருட்படுத்தாமல் நீ பிடிவாதம் பிடித்துச் சேநாதிபதியைப் பார்த்துச் சொன்னதே நல்லதாய்ப் போயிற்று. பூங்குழலி ! சேநாதிபதியிடம் கூறியதை என்னிடமும் ஒரு தடவை கூறுவாயா? மரத்தின் மறைவிலிருந்து நீ கேட்டாயே, அப்போது அந்த வீரர்கள் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினார்கள் ?''

''அரசே ! அதைச் சொல்வதற்கு என் நா கூசுகிறது.''

''பெரிய மனம் பண்ணி எனக்காக இன்னொரு தடவை சொல் !''

''தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு போவதற்காக அவர்கள் வந்திருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்.''

''யாருடைய கட்டளையின் பேரில் அவ்விதம் வந்தார்கள் என்பது பற்றி ஏதாவது பேசிக் கொண்டார்களா ?''

''அதை நான் நம்பவில்லை, ஐயா ! பழுவேட்டரையர்களின் சூழ்ச்சியாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தேன்.''

'' உன்னுடைய கருத்தைப் பிறகு தெரிவிக்கலாம். அவர்கள் பேசிக் கொண்டதை மட்டும் சொல், சமுத்திர குமாரி !''

''சக்கரவர்த்தியின் கட்டளை என்று பேசிக் கொண்டார்கள்.''

''ரொம்ப நல்லது: அதற்குக் காரணம் ஏதாவது சொல்லிக் கொண்டார்களா ?''

'' சொல்லிக் கொண்டார்கள். தாங்கள் இந்த நாட்டிலுள்ள புத்த குருக்களுடன் சேர்ந்து கொண்டு இலங்கை ராஜ்யத்துக்கு மன்னராக முடிசூட்டிக் கொள்ளச் சூழ்ச்சி செய்தீர்களாம்.... இவ்விதம் சொன்ன



அந்தப் பாவிகளை அங்கேயே கொன்று விட வேண்டும் என்று எனக்குக் கோபமாக வந்தது...''

'' நல்ல காரியம் செய்ய எத்தனித்தாய் ! சக்கரவர்த்தியின் தூதர்களை எவ்விதத்திலும் தடை செய்யக் கூடாது என்று உனக்குத் தெரியாதா....? நல்லது; இன்னும் அவர்கள் முக்கியமான விஷயம் ஏதேனும் சொன்னதாக உனக்கு ஞாபகம் இருக்கிறதா?''

''சேநாதிபதிக்கு அவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் என்கிற விஷயம் தெரியக்கூடாது என்றும், தெரிந்தால் தங்களைத் தப்புவிக்க அவர் பிரயத்தனம் செய்யலாம் என்றும் சொன்னார்கள். ஆகையால் தாங்கள் இருக்குமிடம் தெரிந்து கொண்டு நேரில் தங்களிடம் கட்டளையைக் கொடுத்துக் கையோடு அழைத்துப் போக வேண்டும் என்றும் சொன்னார்கள்......''

''ஆகையால் நீ உடனே சேநாதிபதியைத் தேடிக்கொண்டு புறப்பட்டாயாக்கும். எனக்குப் பெரிய உதவி செய்தாய், சமுத்திரகுமாரி ! சற்று அப்பால் இரு.

இவர்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி நான் கலந்து ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் முன்மாதிரி ரொம்ப தூரம் ஓடிப் போய்விடாதே. மறுபடியும் உன்னைப் பிடித்துக்கொண்டு வருவதற்கு வந்தியத்தேவரை அனுப்பும்படி செய்து விடாதே!''

சமுத்திர குமாரி சற்று நகர்ந்து ஒரு தூணின் அருகில் நின்று கொண்டாள். இளவரசரின் முகத்தைப் பார்க்கக்கூடிய இடத்திலேதான் நின்றாள்.

தேன் குடத்தில் முழுகிய இரு வண்டுகள் மூச்சுத் திணறிக் கொண்டிருந்தன. மெதுவாகச் சமாளித்துக் கரைக்கு வந்த பிறகு தேனைச் சுவை பார்த்துக் களிக்கத் தொடங்கின. பூங்குழலியின் கண்களும் இப்போது அத்தகைய சௌகரியமான நிலையில் இருந்தன. இளவரசரின் முக சௌந்தரியமான தேனை அவை பருகித் திளைத்தன. அவளுடைய உள்ளமோ நெஞ்சுக்குள் கட்டுப்பட்டு நிற்கமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தது. நெஞ்சை வெடித்துக் கொண்டு வெளியேறி வான வெளியெங்கும் பொங்கி நிறைந்துவிட வேண்டும் என்று தவித்துக் கொண்டிருந்தது.

* * *

இளவரசர் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரியைப் பார்த்து, ''ஐயா! பரம்பரையாக எங்கள் குடும்பத்துக்குச் சிநேகிதமான குலத்தின் தலைவர் தாங்கள்; என் தந்தையின் உற்ற நண்பர்; தங்களை நான் என் தந்தைக்கு இணையாகவே மதித்து வந்திருக்கிறேன். தாங்களும் என்னைத் தங்கள் சொந்தப் புதல்வனாகவே கருதிப் பாராட்டி வந்திருக்கிறீர்கள். ஆகையால் இச்சமயம் என்னுடைய கடமையைச் செய்வதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும். அதற்குக் குறுக்கே நிற்கக் கூடாது!'' என்றார்.

சேநாதிபதி மறுமொழி சொல்வதற்குள் பார்த்திபேந்திரனைத் திரும்பிப் பார்த்து, ''ஐயா! தங்களையும் கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் என் அருமைத் தமையனாரின் உற்ற நண்பர். என் தமையனாரின் வாக்கைத் தெய்வத்தின் வாக்காக மதித்து நான் போற்றுகிறவன். ஆகையால் தங்களுடைய வார்த்தையையும் மதித்துப் போற்றக் கடமைப்பட்டவன். தங்களைப் பெரிதும் வேண்டிக் கொள்கிறேன். என் கடமையை நான் நிறைவேற்றுவதற்குத் தடை எதுவும் சொல்லக் கூடாது!'' என்றார்.

சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். அந்தப் பார்வையின் மூலம் ஒருவருடைய பயத்தை இன்னொருவருக்குத் தெரிவித்துக் கொண்டார்கள்.

சேநாதிபதி இளவரசரைப் பார்த்து, ''இளவரசே! தாங்கள் கூறுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. வாழ்நாளெல்லாம் நான் போர்க்களத்திலே கழித்தவன். மூடுமந்திரமாகப் பேசினால் தெரிந்து கொள்ள இயலாதவன். தங்களுடைய கடமையைச் செய்யப் போவதாகச் சொல்லுகிறீர்கள். அப்படியென்றால் என்ன? எந்தக் கடமையை என்ன மாதிரி செய்யப் போவதாக உத்தேசித்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''இச்சமயம் என்னுடைய கடமை ஒன்றே ஒன்றுதான். என் தந்தையின் கட்டளையை நிறைவேற்றி வைக்க வேண்டியதுதான். என்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படியான கட்டளையுடன் என் தந்தை ஆட்களை அனுப்பி வைத்திருக்கிறார். என்னை அவர்கள் தேடி அலையும்படியாக ஏன் வைத்துக் கொள்ள வேண்டும்? நானே அவர்கள் இருக்குமிடம் சென்று என்னை ஒப்புக் கொடுத்து விடுவேன். அதுவே இப்போது நான் செய்ய வேண்டிய கடமை....''

''முடியவே முடியாத காரியம். எய் உடம்பில் உயிருள்ள வரையில் அதை நான் அநுமதிக்க மாட்டேன். தடுத்தே திருவேன்'' என்றான் பார்த்திபேந்திரன்.

சேநாதிபதி அவனைப் பார்த்து, ''பதற வேண்டாம்; பொறுங்கள்!'' என்றார். பின்னர் இளவரசரை நோக்கிக் கூறினார்:

''ஐயா! தங்களுடைய கடமையைப் பற்றிச் சொன்னீர்கள். எனக்கும் ஒரு கடமை இருக்கிறது. அருள் புரிந்து அதைக் கேட்க வேண்டும். கொடும்பாளூர் வேளிர் பெருங்குடியில் இன்று உயிரோடிருக்கும் ஆண் மகன் நான் ஒருவன்தான். மற்றவர்கள் அனைவரும் சோழ சாம்ராஜ்யத்தின் சேவையில் இறந்து போனார்கள். அநேகமாக எல்லாரும் போர்க்களத்தில் மடிந்தார்கள். நானும் ஒரு நாள் அவ்விதம் இறந்து போவேன். யார் கண்டது? ஆகையால் என் வார்த்தையைக் கொஞ்சம் பொறுமையுடன் கேட்க வேண்டும். அரண்மனை மாடங்களில் அருமையாக வளர்க்கப்பட்டு வந்த தங்களைச் சென்ற ஆண்டில் தென் திசைப் படைகளின் மாதண்ட நாயகராகச் சக்கரவர்த்தி நியமித்தார். அப்போது என்னைத் தனியாக

அழைத்துச் சொன்னார்: 'இளவரசன் என்னை விட்டுப் பிரிவது என் உயிரே உடலிலிருந்து பிரிவது போலிருக்கிறது. ஆயினும் என்னுடைய ஆசைக்காக அவனை நான் அரண்மனைக்குள்ளேயே வைத்து வளர்க்கக் கூடாது. அவன் வெளியேறிப் போக வேண்டியதுதான்; அண்ணனைப் போல் வீரன் என்று பெயர் எடுக்க வேண்டியதுதான். ஆனால் அவன் உயிருக்கு ஏதாவது ஆபத்து வந்தால் அதே கணத்தில் என் உயிரும் போய் விடும். அவனுக்கு எவ்வித அபாயமும் நேராமல் பாதுகாக்க வேண்டியது உன் பொறுப்பு!'... இவ்வாறு சக்கரவர்த்தி கட்டளையிட்டார். சென்ற ஆண்டில் அவ்வாறு கூறிய சக்கரவர்த்தி இப்போது தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிடுவாரா? அவ்வாறு கட்டளையிடும்படியாகத் தாங்கள் என்ன செய்துவிட்டீர்கள்? இலங்கைச் சிம்மாதனத்தைக் கைப்பற்றுவதற்குத் தாங்கள் சூழ்ச்சி செய்ததாகச் சொல்வது எவ்வளவு அபத்தம்? இந்த அபவாதத்தை யாராவது நம்ப முடியுமா?....''

கொடும்பாளூர்ப் பெரிய வேளார் கூறி வந்ததை இதுவரை பொறுமையுடன் கேட்டு வந்த இளவரசர் இப்போது குறுக்கிட்டார்.

''வேறு யாராவது நம்ப முடியாதோ, என்னமோ? ஆனால் என்னால் நம்ப முடியும்!'' என்றார்.

''என்ன சொல்கிறீர்கள், இளவரசே!''

''இலங்கைச் சிம்மாசனத்தைக் கைப்பற்ற நான் சூழ்ச்சி செய்தது உண்மைதான் என்று சொல்கிறேன்.''

வந்தியத்தேவன் இப்போது முன்னால் வந்து, ''இது என்ன ஐயா! சற்று முன்பு வரையில் சத்தியம் — தர்மம் என்று சொல்லி வந்தீர்கள். இப்போது இப்படிப் பெரும் பொய் சொல்கிறீர்களே!.... சேநாதிபதி! இவர் வார்த்தையை நீங்கள் நம்ப வேண்டாம். நேற்றிரவு புத்த குருக்களின் மகா சபையார் இவருக்கு இலங்கைச் சிம்மாதனத்தையும் கிரீடத்தையும் அளித்தார்கள். இவர் வேண்டாம் என்று மறுதளித்தார். இதற்கு நானும் இதோ நிற்கும் இந்த வைஷ்ணவனும் சாட்சி!'' என்றான்.

பொன்னியின் செல்வர் புன்னகை புரிந்து, ''வந்தியத்தேவரே! ஒரு கேள்வி! சூழ்ச்சி செய்கிறவர்கள் சாட்சி வைத்துக் கொண்டு சூழ்ச்சி செய்வார்களா? நீங்கள் இருவரும் பக்கத்தில் இருந்ததினாலேயே நான் இலங்கைச் சிம்மாசனத்தையும் கிரீடத்தையும் மறுதளித்திருக்கலாம் அல்லவா?'' என்றார்.

வந்தியத்தேவன் அசந்து போனான்! இதற்கு எதிராக அவனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

இளவரசர் மேலும் கூறினார்: ''வாணர் குல வீரரே! உமக்குச் சந்தேகம் இருந்தால் அதோ நிற்கும் வைஷ்ணவரைக் கேட்கலாம். முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் அவரிடம் என்ன சொல்லி அனுப்பினார் என்று கேட்டு அறிந்து கொள்ளலாம். 'புத்த குருமார்கள் தங்களுக்கு இலங்கைச் சிங்காதனம் அளிக்க முன்வருவார்கள். சாட்சியம் வைத்துக் கொண்டு அதை மறுதளிக்கவும்' என்று சொல்லி அனுப்பினாரா, இல்லையா என்று விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம்!''

இதைக் கேட்டு அங்கிருந்த எல்லாருமே திகைத்துப் போய் நின்றார்கள்.

இளவரசர் சேநாதிபதியைப் பார்த்துச் சொன்னார்: ''ஐயா! இதைக் கேளுங்கள். இந்த இலங்கையைக் கவர்ந்து ஆள வேண்டும் என்ற பேராசை என் மனத்தில் இருந்தது உண்மை. இந்தப் பேராசையை எனக்கு உண்டு பண்ணியவர் என் தமக்கையார். 'தம்பி! நீ நாடு ஆளப் பிறந்தவன். உன் கையில் சங்கு சக்கர ரேகை இருக்கிறது. இங்கே உனக்கு இடம் இல்லை. ஆகையால் இலங்கைக்குப் போ! இலங்கைச் சிம்மாதனத்தைக் கைப்பற்றிக் கொள்!' என்று இப்படியெல்லாம் இளையபிராட்டி அடிக்கடி சொல்லி என் மனத்தில் ஆசையை வளர்த்து விட்டார். ஆகையால் நான் குற்றவாளிதான். சக்கரவர்த்தி என்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிட்டதற்குக் காரணம் இருக்கிறது.....''

''கொஞ்சம் பொறுங்கள், இளவரசே! அப்படித் தங்கள் மனத்தில் எண்ணம் உதித்திருந்தால் அது இந்த இலங்கைத் தீவின் பாக்கியம். அதற்குப் பொறுப்பாளியும் தாங்கள் அல்ல; தங்கள் தமக்கையார் இளையபிராட்டியும் அல்ல. சுந்தர சோழ சக்கரவர்த்திதான் அதற்குப் பொறுப்பாளி. அவரே என்னிடம் பல முறை சொல்லியிருக்கிறார். தங்களை இலங்கைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்துப் பார்க்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். குந்தவை தேவியிடம் இதைப் பற்றி முதன் முதலில் கூறியவரும் சக்கரவர்த்திதான். தங்கள் தந்தையின் விருப்



பத்தையே தமக்கையார் தங்களிடம் தெரியப்படுத்தியிருக்கிறார். ஆகையால் தாங்கள் குற்றவாளி அல்ல....''

''சேநாதிபதி! அப்படியானால் என் தந்தையிடம் போவதற்கு நான் ஏன் தயங்க வேண்டும்? அவரிடம் நடந்தது நடந்தபடி சொல்கிறேன். இதோ இருக்கும் இந்த இரண்டு பேரும் எனக்காகச் சாட்சி சொல்லட்டும். பிறகு சக்கரவர்த்தி என்ன கட்டளையிடுகிறாரோ, அதன்படி நடந்து கொள்வது என் கடமை....''

பார்த்திபேந்திரன் இப்போது அனல் கக்கும் குரலில் கூறினான்: ''சேநாதிபதி! ஏதேதோ வெறும் பேச்சுப் பேசிக் கொண்டிருக்கிறோம். இனியும் மூடி மறைப்பதில் பயன் ஒன்றுமில்லை. இளவரசரிடம் உண்மையைச் சொல்லியே தீர வேண்டும். தாங்கள் சொல்கிறீர்களா? அல்லது நான் சொல்லட்டுமா?''

''நானே சொல்கிறேன், பொறுங்கள்!'' என்றார் சேநாதிபதி. அக்கம் பக்கம் பார்த்துவிட்டுக் கூறினார்: ''இளவரசே! தங்களுடைய களங்கமற்ற உள்ளத்தை மாசுபடுத்த வேண்டாம் என்று நான் எண்ணியது பயன்படவில்லை. ஒரு விரஸமான விஷயத்தைப் பற்றித் தங்களுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. பெரிய பழுவேட்டரையர் இந்த முதிய பிராயத்தில் நந்தினி என்னும் பெண்ணை மணம் புரிந்து கொண்டிருப்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே. அவள் ஒரு சூனியக்காரி. பயங்கரமான மாய மந்திர வித்தைகள் அவளுக்குத் தெரிந்திருக்கின்றன. அவற்றின் உதவியால் பெரிய பழுவேட்டரையரை அவள் தன் காலடியில் போட்டு வைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் காலால் இட்ட பணியை இவர் தலையில் ஏந்தி நிறைவேற்றி வைக்கிறார். பழுவூர்குடியில் பிறந்து பல வீரச் செயல்கள் புரிந்த அந்தப் பெரியவருக்கு விதி வசத்தால் இந்த மாதிரி துர்க்கதி சம்பவித்து விட்டது.....''

''சேநாதிபதி! இது நான் கேள்விப்படாதது அல்லவே? சோழ தேசத்தில் நாடு நகரமெல்லாம் பேசிக் கொள்ளும் விஷயந்தானே?'' என்றார் இளவரசர்.

''அந்த மந்திரக்காரி நந்தினியின் சக்தி இது வரையில் பழுவேட்டரையர்களை மட்டும் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தது. இளவரசே! மன்னிக்க வேண்டும்! இப்போது அவள் சக்கரவர்த்தியின் பேரிலும் தன்னுடைய மந்திரத்தைப் போட ஆரம்பித்து விட்டாள். அதனால்தான் இத்தகைய கட்டளையை, — தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படியான கட்டளையை, சக்கரவர்த்தி பிறப்பித்திருக்கிறார்!...''

''சேநாதிபதி! எச்சரிக்கை! சக்கரவர்த்தியைப் பற்றிக் கௌரவக் குறைவாக எதுவும் சொல்ல வேண்டாம். என் தந்தையின் உடம்பில் உயிர் உள்ள வரை அவர் இடும் கட்டளை எதுவானாலும், எந்தச் சந்தர்ப்பத்தில் இடப்பட்டாலும், அதுவே தெய்வத்தின் கட்டளையாகும்...''

''அதை நாங்கள் மறுக்கவில்லை, இளவரசே! சக்கரவர்த்தியின் சுதந்திரத்துக்கு மட்டுமின்றி அவருடைய உயிருக்கே அபாயம் வந்து விடுமோ என்று தான் அஞ்சுகிறோம். நந்தினியைப் பற்றிய முழு உண்மையை நேற்று வரை நானே அறிந்து கொள்ளவில்லை. நேற்றிரவுதான் பார்த்திபேந்திரன் மூலமாகத் தெரிந்து கொண்டேன். அந்தப் பயங்கரமான விஷயத்தைத் தாங்களும் தெரிந்து கொள்வது அவசியம்.

''மூன்று வருஷங்களுக்கு முன்னால் மதுரைக்கு அருகில் வீர பாண்டியனோடு இறுதி யுத்தம் நடந்தது அல்லவா? அப்போது தங்கள் தமையனார் கரிகாலரும் இதோ உள்ள பார்த்திபேந்திரரும் நானும் கலந்தாலோசித்து ஒவ்வொரு காரியத்தையும் செய்து வந்தோம். பாண்டியனுடைய சைனியங்கள் அடியோடு நிர்மூலமாயின. வீரபாண்டியன் முன்னொரு தடவை பாலைவனத்தில் ஓடி ஒளிந்தது போல் இப்போதும் ஓடித் தப்பிக்க முயன்றான். அதற்கு இடம் கொடுக்கக் கூடாதென்று நாங்கள் மூவரும் அவனை எப்படியாவது கைப்பற்றத் தீர்

மானித்துப் பெரு முயற்சி செய்தோம். இந்தத் தடவை வீர பாண்டியனுடைய தலையைக் கொண்டு போகாமல் தஞ்சாவூருக்குத் திரும்புவதில்லை என்று நாங்கள் மூவரும் சபதம் செய்திருந்தோம். ஆகையால் வேறு யாரையும் நம்புவதில்லை என்று நாங்களே அவனைத் தொடர்ந்து சென்றோம். கடைசியாக ஒரு கோயிலுக்குப் பக்கத்தில் இருந்த குடிசையில் அவன் ஒளிந்திருப்பதைக் கண்டுபிடித்தோம். குடிசைக்கு வெளியில் எங்களைக் காவலுக்கு நிறுத்தி வைத்து விட்டுத் தங்கள் அண்ணன் கரிகாலர் தான் உள்ளே நுழைந்தார். வீர பாண்டியனைக் கொன்று அவன் தலையை எடுத்து வந்தார். நாங்களும் எங்கள் காரியம் முடிந்து விட்டதென்று குதூகலமாகத் திரும்பிச் சென்றோம். ஆனால் அந்தக் குடிசைக்குள்ளே ஒரு சிறிய நாடகம் நடந்தது என்பது எங்களுக்குத் தெரியாது. வீரபாண்டியனுக்கு அடைக்கலம் கொடுத்திருந்த பெண் ஒருத்தி குறுக்கே நின்று தடுத்துத் தன் காதலனுக்கு உயிர்ப் பிச்சை கேட்டாள். கரிகாலர் அவளை உதைத்துத் தள்ளி விட்டு வீரபாண்டியனுடைய தலையைக் கொய்து வெளியே எடுத்து வந்தார். இளவரசே! அவ்விதம் சோழ குலத்தின் ஜன்ம சத்துருவான வீர பாண்டியனைக் காப்பாற்ற முயன்றவள்தான் நந்தினி! அவள் தான் பிற்பாடு எழுபது பிராயத்துக் கிழவரை மணந்து தஞ்சாவூருக்கு வந்து 'பழுவூர் இளைய ராணி'யாக விளங்குகிறாள்! அவள் எதற்காக, — என்ன நோக்கத்துடன், — வந்திருப்பாள் என்பதை நாம் ஊகிக்கலாம் அல்லவா? வீரபாண்டியனுக்காகப் பழிக்குப் பழி வாங்கத்தான் வந்திருக்கிறாள். சோழ குலத்தை அடியோடு நிர்மூலமாக்கி விடுவதற்காக வந்திருக்கிறாள். அவள் அருகில் சென்றவர் யாரும் அவளுடைய மோக வலையில் தப்பாமல் திரும்புவது கடினம். அதோ நிற்கும் வந்தியத்தேவன் அதற்குச் சாட்சி சொல்லுவான். சோழ குலத்தைப் பூண்டோடு அழித்து விடப் பயங்கர சபதம் எடுத்திருக்கும் கூட்டத்தைப் பற்றி அதோ நிற்கும் வைஷ்ணவன் சாட்சி சொல்லுவான். அவர்களுக்கு அவசியமான பணத்தையெல்லாம் நந்தினிதான் கொடுக்கிறாள். இளவரசே! துரதிர்ஷ்டவசமாக நம் சக்கரவர்த்திப் பெருமானும் அந்தப் பாதகியின் வலையில் விழுந்து விட்டதாகக் காண்கிறது. மதுராந்தகத் தேவனுக்குப் பட்டம் கட்டுவது பற்றிச்



சக்கரவர்த்தியே யோசித்து வருவதாகத் தெரிகிறது. ஆகையால், சக்கரவர்த்தியின் கட்டளையென்று கருதித் தாங்கள் தஞ்சைக்குப் போவதற்கு இது தருணமல்ல....''

''சேநாதிபதி! தாங்கள் கூறிய செய்திகள் எனக்கு மிக்க வியப்பை உண்டு பண்ணியிருக்கின்றன. ஆயினும் அச்செய்திகளினால் நான் செய்த முடிவுதான் உறுதிப்படுகிறது. என் தந்தையை அவ்வளவு பயங்கரமான அபாயங்கள் சூழ்ந்திருக்கும்போது நான் இருக்க வேண்டிய இடம் அவர் அருகிலேதான். இலங்கை அரசு எனக்கு என்னத்துக்கு? அல்லது இந்த உயிர்தான் என்னத்துக்கு? இனி யோசனை ஒன்றுமே தேவையில்லை. என்னைத் தடை செய்வதற்கு யாரும் முயல வேண்டாம்!'' என்று இளவரசர் கம்பீரமாகக் கூறினார். பிறகு சற்றுத் தூரத்தில் தூணில் சாய்ந்துகொண்டு தம்மைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த பூங்குழலியின் மீது அவர் கண்கள் சென்றன.

''சமுத்திர குமாரி! சற்று இப்படி அருகில் வா!'' என்றார்.

பூங்குழலி நெருங்கி வந்தாள்.

''பெண்ணே! நீ கொண்டு வந்த செய்தியின் மூலம் எனக்குப் பெரிய உதவி செய்தாய். இன்னும் ஓர் உபகாரம் எனக்கு நீ செய்ய வேண்டும், செய்வாயா?'' என்று கேட்டார்.

அடடா! இது என்ன? இந்த ஏழைப் படகுக்காரியிடமா இவர் உதவி கோருகிறார்? இவருக்குக் குற்றேவல் செய்யும் பாக்கியத்தை நாடி வந்தேன்; இவர் என்னிடம் உதவி வேண்டும் என்று யாசிக்கிறாரே! கடவுளிடம் வரம் கேட்க வந்தேன்; கடவுள் தம் திருக் கரங்களை நீட்டி என்னிடம் 'பிச்சை போடு' என்று கேட்கிறாரே! — இவ்வாறு மனத்தில் எண்ணி, ''இளவரசே! தாங்கள் இட்ட கட்டளையை நிறைவேற்றக் காத்திருக்கிறேன்!'' என்றாள் பூங்குழலி.

''சமுத்திர குமாரி! என்னைத் தேடிக் கொண்டு இரண்டு மரக் கலங்கள் தொண்டைமான் ஆற்று முகத்துவாரத்தின் அருகில் காத்திருக்கின்றன என்று சொன்னாய் அல்லவா? அந்த இடத்துக்கு நான் அதி சீக்கிரமாகப் போய்ச் சேர வேண்டும். எனக்கு வழி காட்டி அழைத்துக்கொண்டு போவாயா?''

''பெண்ணே! 'முடியாது' என்று சொல்!'' என்பதாக ஒரு குரல் கர்ஜித்தது. அது சேநாதிபதியின் குரல்தான் என்பதைப் பூங்குழலி உணர்ந்தாள்.

இத்தனை நேரமும் ஏதோ ஒரு சொப்பன லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவளுக்கு இப்போதுதான் தன் நெருக்கடியான நிலைமை தெரிந்தது. எந்த அபாயத்திலிருந்து இளவரசரைத் தப்புவிக்கலாம் என்று ஆசையுடன் இவள் அவசர அவசரமாக ஓடி வந்தாளோ, அந்த அபாயத்தின் வாயிலேயே கொண்டு சேர்க்கும்படி இளவரசர் இப்போது தன்னைக் கேட்டுக்கொள்கிறார்!

''பெண்ணே! 'முடியாது' என்று சொல்!'' — சேநாதிபதியின் இந்தக் கட்டளையின் பொருள் அவளுக்கு இப்போது புலனாயிற்று. நாலா புறத்திலிருந்தும் ஆயிரம் குரல்கள் அதே கட்டளையை அவளுக்கு இட்டன. மரங்கள் அவ்வாறு முழங்கின; மண்டபத்தின் தூண்கள் அவ்விதம் அலறின; மரக் கிளைகளி லிருந்து பறவைகள் கதறின.

ஆனால் அந்தப் பேதைப் பெண்ணின் இதயத்தின் உள்ளே ஒரு மெல்லிய குரல் கேட்டது. 'பூங்குழலி! இதோ உன் அதிர்ஷ்டம்! இளவரசருக்கு வழிகாட்டி அழைத்துப் போவாயானால் அவருடன் இரண்டு தினங்கள் கழிக்கலாம். அவர் அருகில் நீ இருக்கலாம். அவர் உன்னைப் பாராதபோது அவரை நீ பார்க்கலாம். அவர்மீது பட்டுவரும் காற்று உன்மீதும் படும். அவருடைய குரல் உன் காதில் அடிக்கடி கேட்கும். அடி பெண்ணே! நீ கண்டு வந்த எட்டாத கனவில் ஒரு சிறிது நிறைவேறும். பிறகு எது எப்படியானால் என்ன? பூங்குழலி! ஒத்துக் கொள்!' என்று அந்த மெல்லிய குரல் அவள் மனக் காதில் கூறியது.

''சமுத்திர குமாரி! ஏன் தயங்குகிறாய்? எனக்கு இந்த உதவி நீ செய்ய மாட்டாயா? நானே வழி கண்டுபிடித்துக்கொண்டு போக வேண்டியதுதானா?'' என்று இளவரசர் கூறியது அவளுடைய மனம் திடமடையக் காரணமாயிற்று.

''இளவரசே! வழிகாட்ட நான் வருகிறேன்!'' என்றாள்.

சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி அப்போது தம் தொண்டையைக் கனைத்துக்கொண்ட சத்தம் பூகம்பம் ஏற்படுவதற்கு முன்னால் பூமியின் கர்ப்பத்திலிருந்து எழும் பயங்கரத் தொனியை நிகர்த்திருந்தது.

அவர் ஓர் அடி முன்னால் வந்து கூறினார்: ''இளவரசே! தங்கள் விருப்பத்துக்குக் குறுக்கே நான் நிற்கமாட்டேன். ஆனாலும் என் வேண்டுகோள் ஒன்றுக்குச் செவி சாய்க்க வேண்டும். தங்களைச் சிறைப்படுத்த வந்திருப்பவர்களிடம் தங்களை ஒப்படைக்கும் வரையில் தங்களைப் பாதுகாப்பது என் பொறுப்பு. நேற்றிரவு தங்களைக் கொல்ல நடந்த முயற்சிகளைப் பற்றிச் சற்று முன்னால் தங்கள் தோழர்கள் சொன்னார்கள். அந்தக் கொலைகாரர்கள் இன்னும் பிடிபடவில்லை. அவர்கள் யார் என்று தெரியவும் இல்லை. என் மனத்தில் உள்ளதைச் சொல்வதற்காக மன்னியுங்கள். இந்தப் பெண்ணின் பேரிலேயே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டு. அந்தக் கொலைகாரர்களுக்கு இவளும் ஒருவேளை உடந்தையா யிருக்கலாம் அல்லவா? மரக்கலங்களில் தங்களைச் சிறைப்படுத்தி அழைத்துப் போக வந்திருக்கிறார்கள் என்பதே இவளுடைய கற்பனையா யிருக்கலாம் அல்லவா? ஏன் இருக்கக் கூடாது? சற்று முன்னால் இவளுடைய கத்தியைத் தங்கள் தோழர் வந்தியத்தேவர் பிடுங்கி எறிந்தபோது அது யார் பேரிலோ விழுந்து ஓலக் குரல் கேட்டதே, அது யாருடைய குரல்?— இந்தப் பெண் தாராளமாக வழி காட்டிக்கொண்டு வரட்டும். நம்முடைய யானை மேல் ஏறிக் கொண்டு முன்னால் செல்லட்டும். ஆனால் தங்களுடன் நானும் தொண்டைமான் ஆற்றில் உள்ள கப்பல்களைக் காணும் வரையில் வந்தே தீருவேன்! அது என்னுடைய கடமை!''

சேநாதிபதியின் இந்தப் பேச்சைப் புன்னகை பூத்த முகத்துடன் கேட்டுக் கொண்டு நின்ற இளவரசர், ''அப்படியே யாகட்டும்! தங்களுடைய கடமையை நிறைவேற்றுவதற்கு நானும் குறுக்கே நிற்கவில்லை!'' என்றார். **(தொடரும்)**

# சுத்தமான
# மனம் கவரும் வெண்மைக்கு

## சிங்கம் மார்க்
## விக்டோரியா
## ப்ளு ஓ ஓ பி (OOB)
**(மிகச் சிறந்த நீலம்)**




சிறிதளவே விக்டோரியா ப்ளு ஓ ஓ பி உபயோகித்ததில் உங்கள் ஆடைகளுக்குத்தான் என்ன வெண்மை! ஆடைகளை பளபளப்பான வெண்மையாக்குகிறது. உங்களுடைய சட்டைகள், வேஷ்டிகள், விரிப்புகள் முதலியவைகளை அதிக வெண்மையுடன் வைக்க இதுவே சிறந்த சிக்கனமான முறை.



VAPI:UP:6/69

தயாரிப்பாளர்கள்: அல்ட்ராமரீன் & பிக்மெண்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர், மதராஸ் 53

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: கெம்டைல் ட்ரேடிங் கம்பெனி, 318, லிங்கச் செட்டித் தெரு, மதராஸ் 1

விநியோகஸ்தர்கள்: மெஸர்ஸ் என். ரமண்லால் பிரதர்ஸ், 416, தங்கசாலைத் தெரு, சென்னை-1

# தூய்மையும் தொற்றிக் கொள்ளும்

## ரா. கணபதி

கபீர் துணி நெய்து கொண்டிருந்தார்.

மனசு பர தத்துவங்களை நெய்யத் தொடங்கி விட்டது.

பாவும் ஊடும் போட்டு நெய்கிறபோது, இந்த உலக விவகாரங்கள் அனைத்தையும் ஊடுருவிச் செல்லு, அவற்றைப் பிணைத்துக் கொடுக்கிற மூல தத்துவத்தைப் பற்றிச் சிந்தனை ஓடியது.

துணிகளுக்கு நிறம் ஏற்றும்போது வெண்மையான சத்துவத்தையும், சிவந்த ராஜஸத்தையும், கருத்த தமோ குணத்தையும் ஜீவன்மீது ஏற்றுகிற மாயா விலாசத்தை எண்ணி நகைத்துக் கொண்டார் கபீர்.

'மாயாதேவி மனிதனை இப்படியும் அப்படியுமாக உணர்ச்சிகளைக் கோத்து வாங்கி நெய்து ஜமாய்க்கிறாள். இத்தனை இழைகளிடையே மூலாதாரம் முதலிய கமலங்களை ராட்டையாக்கி, இடை, பிங்கலை, ஸுஷும்னை என்ற மூன்று நாடிகளையும் பாவும் ஊடுமாகப் பின்னி வைத்திருக்கிறாள். பத்து மாசமாக நெய்த துணியாக்கும் இந்தச் சரீரம். உடுத்தும் துணியில் கறை படாமல் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளும் அசட்டு மநுஷ்யா! இந்தக் கபீர்தான் பகவான் செய்த சரீரத் துணியில் கறை படாமல் காத்துக் கொண்டான். துணியைப் போட்டுக் கொள்ளாமலே வைத்திருந்தால் அதில் அழுக்கே படியாது. சரீரத்துக்கு அழுக்குப் படியாமல் இருக்கவும் அதுதான் வழி. சரீர உணர்வை வாரி மேலே போட்டுக் கொள்ளாதே. உட்பொருளோடு ஒன்றியிரு. அழுக்காக்காமல் பழுப்பேறாமல் சுத்தமாக இரு.'

பாவும் ஊடும் இசைத்த கபீர், ஊடே பாக்களை இசைத்துக் கொண்டு ஏதோ ஓர் உலகில் சஞ்சரித்தபடி இருந்தார். அவரை இவ்வுலகுக்கு இழுத்து வந்தது ஒரு கொடூரக் குரல்.

"சரீரமா, துணியா? சரீரத்தைக் கழற்றி வைத்து விட்டாயா? சரி, கழற்றி வைத்த சரீரத்துக்கும் உனக்கும்தான் சம்பந்தம் இல்லையே! இதோ அந்தச் சரீரத்துக்குப் 'பூசை' போடுகிறேன்" என்று ஆத்திரமாகச் சொல்லிக் கொண்டு எதிரே நின்றாள் அன்னை நீமா.

அன்னை அப்படிப் பேசுவாளா என்பது ஆச்சரியம்தான்! ஆனால் அந்த அன்னை அதற்கும் மேல் ஒரு படி போய் விட்டாள். துணி துவைக்க உதவும் கட்டையாலேயே கபீர் குறிப்பிட்ட சரீரத் துணியை 'மாக்கு' 'மாக்கு' என்று தாக்கவும் தொடங்கினாள்.

அவள் செய்த அக்கிரமத்தைக் கபீர் பொருட்படுத்தவில்லை. "சீடன் துணி, குரு வண்ணான், படைத்தவன் சவுக்காரம்; ஞான ஆனந்தம் என்ற கட்டையால் துவைத்தால் ஜோதி வெளியாகும்" என்று பாடினார்.

அந்த அதிசய அன்னை தறியைத் தாறுமாறாகத் தள்ளி விட்டாள். நூலெல்லாம் சிக்கலாகி விட்டது.

அந்த மகா அதிசயப் பிள்ளையோ அப்போதும் பாட்டுத்தான் பாடினார்! மனத்தின் சிக்கலை ராமன் பெயர் சொல்லி அவிழ்த்து விடலாம் என்று பாடினார்.

"பார்த்தீர்களா! உங்கள் அற்புதப் பிள்ளை சொல்வதை! அந்தப் பாவி காஜியார் இருக்கார்-அவனைப் பார்த்துக் கபீர் என்று பெயர் வைத்தானே! இவன் காபிராக அல்லவா இருக்கிறான்! இந்த அநியாயத்தைக் கண்டும் காணாமல் இருக்கிறீர்களே! வாருங்கள் உள்ளே" என்று ஓலமிட்டாள் அன்னை.

'காபிர்' என்றால் சமய விரோதி. ஹிந்து மதக் கடவுளான ராமன் பெயரைக் கபீர் சொன்னதால் அந்த முஸ்லிம் தாய் அவரைக் காபிராக வர்ணித்தாள்.

தந்தையின் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வழிந்தது. "நீமா, குழந்தையை ஏன் இப்படிக் கொடுமை செய்கிறாய்! இதற்கு அன்றே லஹர்தாரா ஏரியில் விட்டிருக்கலாமே!" என்றார்.

இடிபெற்று ஒரு புயற்காற்று நின்றது போல் நீமாவும் நிச்சலனமாய் நின்றாள்.

சிறிது போது நிசப்தமாகச் சென்றது.

விம்மலுக்கிடையே கம்மலான குரலில் சொன்னாள் நீமா:

"ஆனாலும் இவன் செய்கிற காரியங்கள் பொறுக்கத்தான் முடியவில்லை" என்று கணவனைப் பார்த்துக் கூறினாள். விம்மல் அழுகையாகவே உடைந்து வர, "இன்னும் சற்றுச் சமர்த்தாக இருந்து அடி வாங்காமல் இருக்க மாட்டாயா, அப்பனே!" என்று பிள்ளையின் கழுத்தைக் கட்டிக்கொண்டாள்.

பிள்ளை ஒன்றுமே பேசவில்லை. கட்டையாக இருந்தது.

"ஏன்டா ஏதும் சொல்லாதிருக்கிறாய்? இந்தக் கட்டையாலேயே என்னை இரண்டு சாத்துச் சாத்தேன்" என்று கட்டையை எடுத்து அவன் கையில் திணித்தாள் நீமா.

அந்தக் கட்டையால் தம் கையிலேயே தாளம் போட்டுக் கொண்டு பாடினார் கபீர்:

"இரணியன் நீயே! நரஹரி நீயே!
உன்னையே நீ உகிரால் பிளந்தாய்!
ராமனும் நீயே! ராவணன் நீயே!
உன் தலைகளையே உடைத்து எறிந்தாய்!
கண்ணனும் நீயே! கம்சனும் நீயே!
தன்னைத் தானே கொன்றவன் நீயே!
அடிக்க வருவாய்; அடிபட வருவாய்!
அடிக்கும் அடியாய் வருவதும் நீயே!

"நீ என்னடா சொல்கிறாய்? ஒன்றும் புரியவில்லையே!" என்றாள் நீமா.

"புரியத்தான் புரியாதம்மா, புரியவே புரியாது. கஸ்தூரி மான் இருக்கிறது பார், அது எங்கிருந்து வாசனை வருகிறது என்று புரியாமல் புலம்பிக் கொண்டேதான் இருக்கும். நாலு திசையிலும் தேடித் தேடித் திரியும். அந்த நறுமணம் அதன் வயிற்றிலிருந்துதான் வருகிறது என்று அதற்கு ஒரு நாளும் புரியாது. புரிகிறவரை இந்த அலைச்சல்தான்!"

நீமா பரிதாபமாகக் கணவனைப் பார்த்தாள். "இவன் இப்படி வெல்லாம் பேசுகிறானே, நான் என்ன செய்வேன்! நீங்களானால் பேசாமல் இருக்கிறீர்கள். பேச்சோடு நின்றால், இவன் காரியங்கள் பேச்சுக்கு மேல் விசித்திரமாய், விநோதமாய், விபரீதமாய் இருக்கின்றன. படாத பாடு பட்டு, பட்டு நூல் வாங்கித் தந்தேன். துணி நெய்தான். அற்புதமாகத்தான் நெய்திருந்தான். விற்று வர அனுப்பினேன். வழியில் யாரோ ஒரு காபிர்—பாகவதனாம். அவனுக்கு அந்தப் பீதாம்பரத்தைக் கொடுத்து விட்டு வந்து நிற்கிறான். சர்வ சகஜமாக 'சரீரமே துணி தான், அழுக்குப் படாமலே வைத்திருக்கிறேன்' என்று பாடுகிறான். இவனோடு என்னால் பொறுக்க முடியவில்லை. நீங்கள் கண்டெடுத்த மாணிக்கத்தை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். நான் இந்த வீட்டை விட்டுத் தொலைகிறேன். நீங்கள் இன்னொரு பெண்டாட்டியையும் கண்டெடுத்துக் குஷாலாகக் குடித்தனம் நடத்துங்கள்" என்று பிரலாபித்தாள் நீமா.

"நீமா" என்று ஏதோ ஒரு தெளிவுடன் அழைத்தார் அவளது கணவர்.

அவரை வெறுப்புடன் நோக்கினாள் நீமா.

"கல்லறைக்குப் போகிற வயதில் எனக்கு இன்னொரு மனைவி கண்டெடுக்க வேண்டாம். கபீருக்கு ஒரு நல்ல பெண்ணைப் பார்த்துக் கலியாணம் செய்து வைப்போம். தானே நாளா வட்டத்தில் உலக வழக்கத்துக்கு வந்து விடுவான்" என்றார் கிழவர்.

"அதையும் செய்து பார்த்தால் போகிறது" என்று சம்மதம் தெரிவித்தாள் நீமா.



காந்திஜீ விரும்பிய கீதம்

'ஈன்றெடுத்த மாணிக்கம், லஹர் தாரா ஏரி, காஜியார் குர்-ஆனைப் பார்த்துப் பெயர் வைத்தது'— இவையெல்லாம் அந்தத் தம்பதியின் பேச்சில் அடிக்கடி அடிபடும். பக்த சிகாமணிகள் பலரது ஜனன விருத்தாந்தம் போலவே கபீருடையதும் ஒரு புதிராக இருந்ததுதான் இந்தப் பேச்சுகளுக்குக் காரணம்.

நீரு காசியில் வாழ்ந்து வந்த சேணியர். முஸல்மான். அவருக்குப் புத்திர பாக்கியம் வாய்க்கவில்லை. வயதுக் காலத்தில் அவர் ஒரு பக்கிருக்கு உணவிட்டு உபசரித்தபோது, 'உமக்குப் பின் இந்த விருந்தோம்பலைத் தொடர்ந்து நடத்த ஒரு பிள்ளை வரப்போகிறான்' என்று மொழிந்து சென்றார் பக்கிர்.

'இத்தனை வயதுக்குப் பிறகா?' என்று அவநம்பிக்கையுடன் எண்ணினார் நீரு.

ஆனாலும் பக்கிர் கூறிச் சென்றது அவர் நினைவிலே நீங்காமல் நின்றது. நூல் கண்டுகளை 'லஹர்தாரா' ஏரியில் அலசும்போதும் அவருக்கு இதே நினைப்பாக இருந்தது. ஏரியில் வெள்ளமாக நீர் மோதியது. அதில் ஓர் அலை நீருவின் நூல் கண்டுகளை இழுத்துக் கொண்டு ஓடிவிட்டது.

அப்போதுதான் நீருவின் சிந்தனை ஓட்டம் கலைந்தது. ''அடடா, நூலைத் தவறவிட்டோமே. நூற்கண்டைக் கண்டு எடுக்காவிட்டால் நீமா சோறு போட மாட்டாளே!'' என்று எண்ணினார். நல்ல வேளையாக, ஏரிக் கரையோரமாகவேதான் கண்டுகள் மிதந்தன. அவற்றைத் தொடர்ந்து சென்றார் நீரு. அவை நீருக்குள் முழுகவில்லை. ஏரிக்கு உட்புறமும் செல்லவில்லை. ஆனால் நீருவால் எடுக்க முடியாதபடி, அவர் எவ்வளவு வேகமாக வந்தாலும் அதைவிடச் சற்று வேகமாகவே கரையோரமாக மிதந்தன.

இருள் பரவி வந்தது. நீரு களைத்துப் போனார். அதே சமயத்தில் நூற்கண்டுகள் குறிப்பிட்ட ஓரிடத்தில் கரையில் வந்து படிந்தன. இருளில் துழாவி அவற்றை எடுத்தார் நீரு.

கூடவே பட்டு நூற்கண்டினும் கோமளமாக எதுவோ அவர் கையில் பட்டது.

அவர் உடம்பினுள் ஓர் அன்புச் சக்தி வெள்ளி ரசமாகப் பாய்ந்தது.

அந்த மிருதுவான வஸ்துவை வாரி எடுத்து வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தார்.

அதற்குப் பட்டுப் போன்ற கேசமும் பட்டுப் போல் இமையும், மூக்கும், கன்னமும், உதடும், காதுகளும், கரசரணங்களும் இருந்தன.

பக்கிரி, பிள்ளை வரம் தந்ததை நினைவு கூர்ந்தார் நீரு.

''எந்த ஒழுக்கம் கெட்டவள் பெற்றுப் போட்ட சனியனோ? இதை ஏன் தூக்கி வந்தீர்கள்? இந்த வயசில் எனக்கு இந்தக் குழந்தை வளர்ப்புத் தொல்லை வேறு பாக்கி'' என்று எரிந்து விழுந்தாள் நீமா.

''அப்படிச் சொல்லாதேயடி தாயே! இதன் முகத்தை விளக்கடியில் பார்த்துவிட்டுப் பேசு'' என்று மன்றாடினார் நீரு.

தீபத்தின் கீழ் பொக்கை வாய் திறந்து சிரித்தது பளிங்கு போன்ற தூய குழந்தை.

நீமா கைநீட்டி வாங்கி மார்போடு அணைத்துக் கொண்டாள். தாய்மை குறுகுறுத்துக் கொண்டு பெருகிற்று. அதை அந்தத் தாய்மை 'மடக்கு மடக்கு' என்று குடித்தது.

அந்தக் கிழவிக்கே இது பேரதிசயமாகி விட்டது. காஜியாரிடம் குழந்தையைத் தூக்கிக் கொண்டு ஓடினார்.

பழுத்த பழமாக இருந்த காஜியார் அல்லாஹ்வைத் தியானித்தார். அவரது நெஞ்சு மென்னகை புரிந்தது.

''இந்தக் குழந்தை இதற்கு முன் யார் என்ற கேள்வி இப்போது ஏன்? இனி மேலிருந்து இது உங்கள் குழந்தையே என்பது அல்லாஹ்வின் ஆணை. நூலோடு கிடைத்த குழந்தை என்றும் அறுபடாத பக்தி நூல்களைத் தரப் போகிறது என்று 'குதா' சொல்கிறார்'' என்று கூறிக் கொண்டே திருக் குர்-ஆனைப் பிரித்தார். அதில் 'கபீர்' என்ற பதம் அவர் கண்ணில் பட்டது. ''பிள்ளைக்குக் கபீர் என்று பெயரிட்டு வளருங்கள்'' என்றார்.

வீடு திரும்புகையில் நீரு நீமாவிடம் கேட்டார்: ''குழந்தையை வளர்ப்பது பெரிய பொறுப்புத்தான். இன்னும் ஊராருக்கு விஷயம் தெரியாது. வேண்டுமானால் அதை மீண்டும் லஹர்தாரா கரையிலேயே போட்டு விட்டு வரவா?''

முகத்தில் அடித்தாற்போல் மறுமொழி பேசினள் நீமா. ''ஏன் உங்கள் புத்தி இப்படிப் போயிற்று? அல்லாஹ் தந்த பிச்சை உங்களுக்கு வேண்டாமானால் போங்கள். எனக்கு அதை விட்டு இருக்க முடியாது.''

தாய்மை அவள் உடலில் கனத்ததால் அப்படிப் பேசினள்!

அவளேதான் இன்று பிள்ளையை மொத்துகிறாள்! மொத்தாமல் இருக்க முடியாது. அப்படிப்பட்ட பிள்ளையாகத்தான் வளர்ந்தார் கபீர்.

வீட்டில் சல்லிக் காசு சேர விடமாட்டார். எப்போது பார்த்தாலும் பக்கீர்களுக்கும் பாகவதர்களுக்கும் தானம்தான்.

''ஏனடா'' என்று கேட்டால் பாடுவார்:

**படகிலே நீர் புகுந்துவிட்டால் அதை**
**இறைக்கப் படபடப்பாய்!**
**வீட்டினிலே பணம் புகுந்த பின் அதனை**
**விட்டு வைக்கல் ஆமோ?**

''இது என்ன தத்துவமோ? இதை எங்கிருந்து இந்தப் பிள்ளை தெரிந்து கொண்டதோ? இதற்கு என்ன பூர்விகமோ?'' என்று அதிசயத்துடன் எண்ணுவார் நீரு.

அதையே எண்ணுவாள் நீமா.

கபீரின் பூர்விகத்தை யாரே அறிந்தபடி? பக்த விஜயக் கதைகள் அவரை சாட்சாத் சுகப்பிரம்மத்தின் அவதாரமாகச் சொல்கின்றன.

கபீர் சொல்வார்: ''உத்தமர்களின் உபதேசமே முக்கியம். உதித்த விதம் அல்ல. மேலுறையை மீண்டும் மீண்டும் பார்த்து உள்ளே இருக்கும் கத்தியை மறந்து விடாதே!''

திருவள்ளுவர் போல் சேணியராக வாழ்ந்து செஞ்சொல் தந்தவர் கபீர் என்பது நமக்குப் போதும்! (அடுத்த இதழில் முடியும்)




கைகேயி மேலும் ராமனிடம் கூறுவாள்: "கொடுத்தேன் என்று ராஜாவான ஒருவர் பிரதிக்ஞை செய்துவிட்டுப் பிந்தி வருந்தப்படுவது மடமையல்லவா? அவர் கொடுத்த வரத்தைச் செய்து தீர்க்க வேண்டியது உன் கையிலிருக்கிறது. உனக்குச் சொல்லப் பயந்து கொண்டு கொடுத்த வரத்தையும் செய்த பிரதிக்ஞையையும் பொய்யாக்கலாம் என்று யோசிக்கிறார். இது அவருக்குத் தகுமா? 'பயப்பட வேண்டாம். எனக்காக நீர் சத்தியத்தைக் கைவிட வேண்டாம்' என்று நீ அவருக்குத் தைரியமும் உறுதியும் சொல்லிவிட்டால் அவர் பேசுவார். அவருக்கு நீ உதவி செய்ய வேண்டும். எல்லாம் உன் கையிலிருக்கிறது. 'செய்து தீர்க்கிறேன், அதற்குத் தடை யில்லை' என்று நீ எனக்கு உறுதி கூறினால் விஷயத்தைப் பிற்பாடு சொல்லுகிறேன்."

இதைக் கேட்டு ராமன் வருத்தம் மேலிட்டு அரசன் பக்கத்தில் நின்ற கைகேயிக்குச் சொன்னான்:

"அம்மா! என்னைப் பற்றியா இந்தக் கஷ்டம்? என்னைப் பற்றி நீங்கள் இம்மாதிரி சந்தேகப்படலாகாது. நான் அவ்வளவு கெட்டுப் போனவன் அல்ல. என்னைத் தந்தை நெருப்பில் விழச் சொன்னால் விழுவேன் என்று நீங்கள் அறிவீர்கள். இதோ தாயே சபதம் செய்கிறேன். ஒன்றும் விசாரிக்க வேண்டியதில்லை. அரசர் இதைச் செய்ய வேண்டும் என்று என்றால் ஆகக் கூடியதை ஆணையிடலாம். அவர் ஆணை எதுவாயினும் அதைச் செய்வேன். சத்தியம்."

* * *

இப்படி ராமன் சொன்னதைக் கேட்டதும், 'முடிந்தது காரியம்' என்று மகிழ்ச்சி அடைந்தாள் கைகேயி. அரசனும், 'இனித் தப்புவதற்கு வழியில்லை' என்று துக்கத்தில் மூழ்கிப் போனான்.

அதன் மேல் நாணம், இரக்கம் கொஞ்சமுமின்றி மகா பயங்கரமான விஷயத்தைப் பாவி கைகேயி சொன்னாள்:

"ராமா! நீ சொன்ன மொழி உனக்கே தகும். தந்தையைச் சத்தியவானாகச் செய்வதை விட ஒரு மகனுக்கு வேறு என்ன மேலான காரியம்? விஷயத்தை இப்போது சொல்கிறேன், கேள். ஏன் உனக்குச் சொல்ல அரசர் பயந்தார் என்பது உனக்கு விளங்கும். சம்பரனுடன் உன் தந்தை சண்டையிட்டுக் காயம் பட்ட காலத்தில் அவருடைய உயிரைக் காப்பாற்றிய எனக்கு அவர் நான் இஷ்டப்பட்ட இரண்டு வரங்களைத் தருவேன் என்றார். 'இப்போது வேண்டாம், வேண்டும்போது கேட்பேன்' என்றேன். 'அப்படியே

ஆகட்டும்' என்று அவரும் ஒப்புக் கொண்டார். இப்போது அந்த வரங்களைக் கேட்டுப் பெற்றேன். பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும் என்றும், இன்றே நீ இராஜ்யத்தை விட்டு விலகித் தண்டகாரணியம் போக வேண்டும் என்றும் இந்த இரண்டு வரங்களையும் அரசனிடம் அடைந்திருக்கிறேன். உன்னுடைய பிரதிக்ஞையையும் தந்தையின் சத்தியத்தையும் காப்பாற்றுவாயாக. நீயும் பொய்யனாகப் போனால் அது வேறு சங்கதி. இல்லையேல், நான் சொல்வதைக் கேள்; தாமதமில்லாமல் உனக்கு அபிஷேகம் செய்ய வைத்திருக்கும் ஜலத்தைக் கொண்டே பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடத்திவிடச் சொல். ஜடையும் மரவுரியும் தரித்து நீ தண்டக வனம் உடனே செல். சம்மதித்தேன் என்று சொல்லி அரசனுடைய பெருங் கஷ்டத்தைத் தீர்ப்பாயாக. இது உனக்குப் புகழ் தரும்'' என்றாள்.

* * *

'புகழ் தரும்' என்று கைகேயி வாயால் வந்த வார்த்தை உண்மையே அல்லவா? இமய மலையும் கங்கையாறும் சமுத்திரமும் இருக்கும் வரையில் ராமனுடைய புகழ் இருந்தே வரும்!

* * *

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தசரதனுடைய உள்ளம் கொதித்தது. ஆனால் கைகேயியின் வியப்பே வியப்பு! ராமனுடைய முகத்தில் வருத்தம் என்பது அடையாளத்துக்குக் கூடக் காணப்படவில்லை. சக்கரவர்த்தித் திருமகன் புன்னகை செய்து பேசினான்:

''அப்படியா, தாயே! அரசனுடைய பிரதிக்ஞை நிறைவேறும்படி சடையும் மரவுரியும் தரித்து இன்றைக்கே வனம் செல்லுகிறேன்'' என்றான்.

* * *

ராமன் கைகேயியைப் பார்த்துக் கம்பீரமாகப் பேசலானான்:

''தாயே, எனக்கு எள்ளளவும் வருத்தம் இல்லை. பரதனுக்கு நான் எதையும் கொடுத்துவிட்டுப் பரம சந்தோஷத்தை அடைவேன். நீங்கள் யாரும் என்னைக் கேட்காமலே நான் அவனுக்குத் தருவேன். அப்படியிருக்கத் தந்தையின் ஆணை ஏற்பட்டதும் ஒரு கணம் தயங்குவேனா? அரசர் சந்தேகப்பட்டதுதான் எனக்கு வருத்தம் தருகிறது.



அவர் இஷ்டத்தை எனக்கு நேரில் சொல்ல அவருக்கு ஏன் கூச்சம்? அவருக்கு நான் அடிமையல்லவா? அவருடைய வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதை விட எனக்கு வேறு என்ன புகழ்? என்ன பாக்கியம்? அதற்காகவா தந்தை எப்போதும் போல் பிரியமாகப் பேசாமல், முகத்தை எனக்குக் காட்டாமல் கஷ்டப்பட்டது? அவரே நேரில் என்னை அழைத்து இந்த ஆணையைச் சொல்லாததுதான் என்னுடைய குறை. இன்றே ஒரு விசாரமு மில்லாமல் வனம் செல்லுகிறேன். உடனே தூதர்களை வேகமாகப் போகச் சொல்லிப் பரதனை அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள். தாமதிக்க வேண்டாம்'' என்றான்.

சக்கரவர்த்தித் திருமகன் முகத்தில் அந்தக் கணத்தில் தேஜசு நெய் விட்ட அக்கினி போல் வளர்ந்தது. பாவி கைகேயியோ தான் வெற்றியடைந்து விட்டதாக எண்ணிச் சந்தோஷப்பட்டாள். வரப்போகும் துக்கத்தை அவள் அறியவில்லை. பெற்ற மகனுடைய இகழ்ச்சியை விட வேறு என்ன வேண்டும் ஒரு ஸ்திரீக்குத் துக்கம்? ஆசை என்பது அவளை ஏமாற்றி விட்டது. சொந்த மகனான பரதனுடைய குணத்தைக் கூட அவள் சரியாக உணர முடியாமல் செய்து விட்டது.

* * *

நான்கு பக்கமும் வழியடைத்து அகப்பட்டுக் கொண்ட காட்டு யானை போல் தசரதன் தவித்துக் கொண்டிருக்க, கைகேயி, அனுவசியமாக, ''அரசன் பேசுவதற்காகத் தாமதிக்க வேண்டாம்'' என்று ராமனைத் துரிதப் படுத்தினாள்.

''தாயே! என்னை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை'' என்றான் இராமன். ''தந்தையின் சொல்லை நிறைவேற்றுவதை விட நான் எந்தச் சுகத்தையும் அதிகமாக மதிக்கவில்லை. பொருளுக்கு ஆசைப்படுவேன் என்று எண்ணவேண்டாம். பரதன் ராஜ்ய பாரத்தை வகித்து மூப்படைந்த தந்தையைச் சரியாகப் பார்த்து வர வேண்டும். அதுவே என்னுடைய மகிழ்ச்சியுமாகும்!''

இதை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த தசரதன் 'ஓ!' என்று பெருங் குரலிட்டு அழுதான். அரசனையும் கைகேயியையும் பாதங்களைத் தொட்டு வணங்கிவிட்டு ராமன் துரிதமாக அவ்விடத்தை விட்டு வெளியே சென்றான்.

வெளியே இருந்த லக்ஷ்மணன் கண்கள் சிவந்து மகா கோபத்துடன் ராமன் பின் சென்றான்.

வழியில் அபிஷேக குடங்களைக் கண்டு முகத்தில் கொஞ்சமும் வருத்தக் குறி இல்லாமல் கம்பீரமாக அவற்றை வலம் செய்து ராமன் சென்றான். தன்னுடன் வந்த வெண் குடை, சாமரம் முதலியவைகளை விலக்கிவிட்டு, அங்கிருந்த நகரத்து ஜனங்களையும் கலைந்து போகச் சொல்லி விட்டு ஜிதேந்திரியனான சக்கரவர்த்தித் திருமகன் கௌசல்யா தேவியின் மனைக்குச் சென்றான். தாயிடம் விஷயத்தைச் சொல்லி உடனே வனம் செல்வதற்கு விடை பெற்றுக் கொள்ளச் சென்றான்.

* * *

இந்தக் கட்டத்தில் நிகழ்ந்த உணர்ச்சி வேகங்களை எழுத்திலே படித்து விட்டு மாத்திரம் உணர்வது கஷ்டம். அவரவர் பெற்றிருக்கும் கற்பனைச் செல்வத்தை உபயோகித்து அகக் கண்ணால் நிகழ்ச்சிகளைக் காண வேண்டும். தசரதன் உள்ளமும் சக்கரவர்த்தித் திருமகன் உள்ளமும், ஆசைக்கு இரையான பரதனுடைய தாயின் உள்ளமும் வாழ்க்கையில் தினமும் அடிபடும் நம்முடைய உள்ளங்கள்.



வால்மீகி அகக் கண்ணால் முற்றிலும் ராம சரித்திர நிகழ்ச்சிகளைக் கண்டு பாடினார். கம்பரும் அப்படியே பாடினார். ஆழ்வார்களும் கண்டு உள்ளம் உருகிப் பாடியிருக்கிறார்கள். எந்த இடத்திலும் எங்கேயாயினும் ராமாயணக் கதையை யாரேனும் சொன்னால் அவ்விடம், ''பாஷ்பவாரி பரிபூரண லோசன''த்துடன் 'கண்களிலிருந்து நீர் பெருக' ஆஞ்சநேயர் கைகூப்பி நின்று கேட்டுக் கொண்டிருப்பார் என்று பெரியோர்கள் சொல்வதன் கருத்து இதுவே.

இந்தக் கட்டத்தைப் பக்தியுடன் படிக்கும் ஆண் பெண் குழந்தைகளுக்கு எப்போது எந்தத் துக்கம் வந்தாலும் ஸ்ரீ ராமன் அருளால் அந்தத் துக்கத்தைத் தாங்கும் சக்தி உண்டாகுக.

(தொடரும்)

# ஜெண்டீல்

**விலையுயர்ந்த ஆடைகளை வீட்டிலேயே பத்திரமாக சலவை செய்ய!**




## ஒவ்வோர் ஆடைக்கும் ஆகும் செலவு 15 பைசாதான்!

புத்தம் புதிய திரவ டிடர்ஜண்ட் ஜெண்டீல், உங்கள் விலையுயர்ந்த ஆடைகள் அனைத்தையும் வீட்டிலேயே சிறப்பாக சலவை செய்வதற்காக பிரத்யேக செய்முறையின் மூலம் தயாரிக்கப்பட்டுள்ளது. பட்டு, கம்பளி, நைலான், ரேயான், 'டெரீன்' முதலான துணிகளை ஜெண்டீல் மிகமிக மென்மையாகவும் மேன்மையாகவும் சலவை செய்யும். பின்னர் அத்துணிகள் புத்தம் புதியவைபோல் தோற்றமளிக்கும். உங்கள் ஜரிகைப் புடவைகளைக்கூட நீங்கள் ஜெண்டீலால் சலவை செய்யலாம்; ஜரிகை பளபளப்புடன் புது மெருகு பெற்றுத் திகழும். ஜெண்டீல் மிகவும் சிக்கனமானது!

ஒரு பாட்டில் ஜெண்டீல் சுமார் 35 ஆடைகளை சலவை செய்யப் போதுமானது! —அதாவது, ஓர் ஆடைக்கு ஆகும் செலவு 15 பைசாதான்! பத்திரமாக சலவை செய்யும் சிக்கனமான ஜெண்டீல் இன்றே உபயோகித்துப் பாருங்கள்!

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

Shilpi SOM/6A/69 Tam

# வேஷங்கள்

## அத்தியாயம் 2

இந்திரா பார்த்தசாரதி

அடுத்த நாள் காலை. ரமணியின் வீட்டுக்குச் சென்றான் சங்கரன். கோபு வாசலில் நின்று கொண்டிருந்தான்.

சங்கரனைப் பார்த்ததும், அவனைத் தெரிந்தது போல் காட்டிக் கொள்ள வில்லை கோபு.

''யார் வேணும்?'' என்று கேட்டான்.

''மிஸ்டர் ரமணி....''

கோபு உள்ளே சென்றான். சிறிது நேரம் கழித்து வெளியே வந்தான்.

''உள்ளே வாங்கோ...''

ரமணி ஒரு 'பட்டாபிஷேக நாற்காலி'யில் உட்கார்ந்திருந்தார். இடையில் கைலி. நெற்றியில் திருநீறு. ஒரு சிகரெட் உதட்டோரத்தில் ஒட்டிக் கொண்டிருந்தது. கையில் தினசரித் தாள்.

''எஸ்....?'' அவன் புருவத்தை உயர்த்தினான். கை, எதிரே யிருந்த ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டியது.

சங்கரன் உட்கார்ந்தான்.

''என் பேரு சங்கரன். 'ரெயில்வே போர்டிலே' இருக்கேன்...''

ரமணி எழுந்து கையை நீட்டினான். ''வாட் கான் ஐ டு ஃபார் யூ?...''

''இங்கே ஒரு ரூம் காலியா யிருக்குன்னு கேள்விப்பட்டேன்...'' என்றான் சங்கரன்.

ரமணி மறுபடியும் தன் நாற்காலியில் போய் உட்கார்ந்தான். இடக் கையினால் தாடையைச் சிறிது நேரம் தடவிக் கொண்டான். மேஜையின் மீது வைக்கப்பட்ட தினசரித் தாள், மின் விசிறியின் காற்றில் சலசலத்தது.

''ஆமாம். காலியாகத்தான் இருக்கு. நான் சாதாரணமா யாரையும் குடி வைக்கிறதில்லே... நம்மூர்க்காராளா இருந்து இடம் இல்லாமல் கஷ்டப் பட்டா,... ஐ டோன்ட் மைன்ட் அக் காமடேட்டிங்...''

சங்கரன் அவனையே பார்த்துக்கொண்டிருந்தான். இதற்கு ஏதாவது பதில் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறானோ?... 'இடமில்லாமல் கஷ்டப் படுகிறேன்...' என்று கூற வேண்டுமா?

''இப்போ எங்கே இருக்கீங்க?''

''பத்தாம் பிளாக்... 174... ஃபஸ்ட் ஃப்ளோர்...''

''ஃபர்ஸ்ட் ஃப்ளோர்?... உங்களுக்குக் கஷ்டம்தான். உங்களை நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன், பஸ் ஸ்டாப்பிலே...'' அவன் சங்கரன் கால்களைப் பார்க்கத் தவறவில்லை.

சங்கரன் கால்மேல் கால் போட்டுக் கொண்டான்.

''ஐ ஹாவ் ஸம் நியூஸ் ஃபார் யூ...'' என்று சொல்லி விட்டு உள்ளே சென்றான் ரமணி.

அவன் திரும்பி வரும்போது அவன் கையில் ஓர் ஆங்கிலப் பத்திரிகை இருந்தது. அவன் பக்கங்களைப் புரட்டினான். ஒரு குறிப்பிட்ட பக்கம் வந்ததும், 'எஸ்... இந்தாங்க... ப்ளீஸ் ரீட் திஸ்'' என்று அந்தப் பத்திரிகையைச் சங்கரனிடம் கொடுத்தான்.



''போலியோவினாலோ, பிறப்பிலிருந்தேயோ ஊனமாக இருக்கும் கால்களை ஆபரேஷனால் குணப்படுத்த முடியும்.''

சங்கரன் இதைப் பார்த்து விட்டுப் பத்திரிகையைத் திரும்ப ரமணியிடம் கொடுத்தான்.

''இது உற்சாகமான நியூஸ், இல்லியா?'' என்று கேட்டான் ரமணி.

''இது அமெரிக்காவிலே. இந்தியாவிலே இந்த ஆபரேஷன் செய்யறாளா? எனக்குத் தெரியாது. எனக்குப் பிறவியிலிருந்தே இப்படி இருக்கு... போலியோவினாலே இல்லே...''

''அமெரிக்கான்னா என்ன, கொள்ளை தூரமோ? 'சூப்பர்ஸானிக் ஏஜ்'லே போயிட்டு வரது ரொம்பக் கஷ்டமோ?'' ரமணி இதைச் சொல்லிச் சிரித்தான். தான் சொல்வதைத் தானே அனுபவிக்கிறான் என்று சங்கரனுக்குப் பட்டது.

''பணம் வேண்டாமா?'' என்றான்.

''பணம்!...இது ஒரு சின்ன விஷயம். அங்கே, இங்கே 'டொனேஷன்' கேட்டா தன்னாலே வந்து குமியறது... உங்களுக்கு அப்ஜெக்ஷன் இல்லேன்னா ஒரு கமிட்டி ஃபார்ம் பண்ணினாப் போச்சு... உங்க பேரென்ன சொன்னீங்க?.... சங்கரன்.... எஸ்... 'சங்கரன் ரீஹேபிலிடேஷன் ஃபண்ட்!'''

சங்கரனுக்கு அவன் கழுத்தை நெரித்துக் கொல்லலாமா என்று தோன்றிற்று. கோபத்தை அடக்கிக் கொண்டான்.

''ஆல் ரைட்... கமிங் டு பிஸினஸ், உங்களுக்கு 'ரூம்' வேணும்... இந்த உதவி என்னாலே செய்ய முடியும்.. 'ரூமை'ப் பாருங்கோ....''

''ரூமை நான் பார்த்திருக்கேன்... லோதி காலனி பூரா ஒரே மாதிரி தானே.''

''ஆமாம்... ஆமாம்... நீங்க பார்க்க வேண்டாம்னு சரி... வாடகை....''- ரமணி சிறிது நேரம் பேசாமல் இருந்தான். அவன் சிகரெட்டை அணைத்து 'ஆஷ் டிரே'யில் போட்டான்.

''முன்னே இருந்தவர் எண்பது ரூபாய் கொடுத்தார். நீங்க எழுபது கொடுத்தாப் போறும்...''

''இல்லே... நானும் எண்பது ரூபாய் கொடுக்கிறேன்...''

ரமணி ஆச்சரியத்துடன் சங்கரனைப் பார்த்தான். இதை அவன் எதிர்பார்க்கவில்லை.

''எதுக்காக இப்படிச் சொல்றீங்க?''

''எதுக்காக நீங்க எனக்குச் சலுகை தரணும்?''

ரமணி தோள்களைக் குலுக்கிக் கொண்டான். ''ஆல்ரைட். உங்க இஷ்டம்...''

சங்கரனும் எழுந்திருந்தான். அப்பொழுது கோபு அங்கே வந்தான்.

''உங்க பிள்ளையா?'' என்று கேட்டான் சங்கரன். ரமணி பதில் சொல்லவில்லை.

''உன் பேரென்ன?'' என்று கோபுவின் முதுகில் தட்டினான் சங்கரன்.

''கோபு...''

திடீரென்று நினைவு வந்தது போல் ரமணி சொன்னான்: ''காப்பி சாப்பிட்டு விட்டுப் போங்களேன்...''

''பரவாயில்லே... நான் வரேன்..''

''நோ... நோ... காப்பி சாப்பிடுங்கோ... ஹாவ் யுவர் ஸீட்...கோபு, அம்மாவைக் காப்பி கொண்டு வரச் சொல்லு....''

''ப்ளீஸ் வேண்டாம்...நான்வந்து..''

அப்பொழுது கோபு சங்கரனைப் பரிவுடன் நோக்கினான். காப்பி சாப்பிட்டு விட்டுப் போக வேண்டும் என்று இறைஞ்சுவது போலிருந்தது அந்தப் பார்வை.

சங்கரன் மீண்டும் உட்கார்ந்தான். கோபு உள்ளே சென்றான்.

''இஃப் யூ டோண்ட் மைண்ட்.. நான் 'பாத் ரூம்' போயிட்டு வந்துடறேன்....'' என்றான் ரமணி.

சங்கரனுக்குச் சங்கடமாக இருந்தது. ''எஸ்... எஸ்....'' என்று தலையை அசைத்தான்.

மேஜையில் கிடந்த செய்தித் தாளை அவன் பிரித்துப் பார்க்கத் தொடங்கினான்.

''இதுதான் எங்க அம்மா...!''

கோபுவின் குரல் கேட்டதும் சங்கரன் திரும்பிப் பார்த்தான். கோபுவின் அம்மாவா இவள்?

தெய்வத்தின் நகைச்சுவை குரூரமானது என்பதில் சந்தேகமில்லே. சிப்பியின் வயிற்றில் முத்தை வைப்பதற்குப் பதிலாக, முத்தின் வயிற்றில் சிப்பியை வைத்து விட்ட சிருஷ்டிக் குழப்பம்!.... 'தொடப் போகின்றேன்' என்று சொன்னாலே இரத்தம் பாய்ந்து விடும் சிவப்பு நிறம். ''எங்கம்மா ஒரு பூவை மோந்துகூடப் பார்க்க மாட்டா, வாடிடும்னு....'' என்று கோபு சொன்னது அவன் நினைவுக்கு வந்தது. வாஸ்தவம்தான்.... இவள் எப்படி வாய்த்தாள், இந்த வெறுந் தடியன் ரமணிக்கு?

அவள் சங்கரனைப் பார்த்துப் புன்னகை செய்தாள். ''காப்பி சாப்பிடுங்கோ....''

''தாங்க்ஸ்...'' அவன் காப்பித் தம்ளரை வாங்கிக் கொண்டான்.

''நேத்து ராத்திரி கோபு எல்லாம் சொன்னான்'' என்றாள் அவள் மிக மெதுவாக. ரமணிக்குத் தெரியக் கூடாது என்ற ஜாக்கிரதை அதில் தெரிந்தது. தாய்க்கும் மகனுக்குமிடையே இருந்த அந்த அந்தரங்க பாவத்தைச் சங்கரன் புரிந்து கொண்டான். அப்படியென்றால், அவனுக்கும் ரமணியைக் கண்டால் பிடிக்காது என்பது உண்மைதானா?

''நமஸ்தே பேஹறன்ஜீ... ரமணி சாப் ஹைறங்?'' தொள தொளவென்று பைஜாமா போட்டுக் கொண்டு பாகவதர் கிராப்புடன் ஒருவன் நின்று கொண்டிருந்தான்.

கோபுவின் அம்மா முகத்தில் திடீரென்று ஒரு கடுமை தோன்றியது. பதில் சொல்லாமல் உள்ளே சென்றாள்.

''மாஸ்டர்ஜீ... கி ஹால் ஹை?'' என்று வந்தவன் கோபுவைத் தட்டிக் கொடுத்தான். அவன் பற்களில் வெற்றிலைக் காவி. ஒரு பல் தங்கப் பல். கன்னங்களில் சதை தொங்கியது.

அவன் சுவாதீனத்துடன் நாற்காலியில் உட்கார்ந்தான். சங்கரனைப் பார்த்துக் கேட்டான். ''ஆப்...?''

சங்கரன் பதில் சொல்லவில்லை. யார் இவன்?

அப்பொழுது உள்ளிருந்து ரமணி வந்தான்.

''ரமணி சாப், நமஸ்தே....''

''அரே.... சம்புராம் மகராஜ்.....! ஆயியே, ஆயியே....'' என்று கூறிக் கொண்டே வந்து அவனைக் கட்டிக் கொண்டான் ரமணி.

இருவரும் தங்கள் அன்பை ஆவேசமாகத் தெரிவித்துக் கொண்ட பிறகு, நாற்காலியில் உட்கார்ந்தனர்.

''ஹமாரா தோஸ்த், சங்கரன்....'' என்றான் ரமணி சம்புராம் மகராஜிடம்.

# லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ




பருகியவர் மீண்டும் மீண்டும் விரும்பிக்
கேட்கும் பானம்! கோப்பைக்குக்
கோப்பை திருப்தி தரும் சிறந்த மணம்!
நிறம் நிறைந்த கெட்டியான பானம்!
பருகுவதில் இன்பம்! விலையிலும் சிக்கனம்!

ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் தூள்வகை
தேயிலைகளில் ஏற்றமிக்கது.




லிப்டன் என்றாலே
நல்ல டீ

LHGC-8 TAM

சம்புராம் மகராஜ் எழுந்திருந்து வந்து சங்கரனை ஒரு தரம் கட்டிக் கொண்டான்.

''இவன் பெரிய அதாரிட்டி 'கதக்' டான்ஸிலே. எனக்கு ரொம்ப ஃப்ரண்ட்''— ரமணி சங்கரனிடம்.

சம்புராம், ரமணி சொன்னதை ஒப்புக் கொள்வது போல் தலையை ஆட்டினான்.

சங்கரன் எழுந்திருந்தான். '' சரி, வரட்டுமா ?''

''காப்பி சாப்பிட்டாச்சா ?'' என்று கேட்டான் ரமணி.

'' ஆயிடுத்து.... நான் இந்த 'செகண்ட் சாட்டர்டே'லே மூவ் பண்ணறேன்.....''

''ஓ... எஸ். யூ ஆர் வெல்கம் எனி டைம்....!'' என்றான் ரமணி.

சங்கரனால் ரமணியைப் பற்றி ஒன்றும் தீர்மானம் செய்ய முடியவில்லை.

ரமணிக்கு எவ்வளவு முகங்கள் ? சம்புராம் மகராஜ் அவனுடைய நெருங்கிய நண்பன் என்றால், இது ரமணியின் கலைத் துறை ஈடுபாட்டைக் காட்டுகின்றதா ? அப்படியென்றால் அவ்வளவு அழகான மனைவிக்கு அவனைக் கண்டால் ஏன் பிடிக்கவில்லை ?... கலை ரசனை உடையவர்கள் பூவைப் போட்டுக் காலால் துவைத்து மிதிக்கும் சுபாவம் உடையவர்களாக எப்படி இருக்க முடியும்? எங்கோ ஒரு தவறு இருக்கிறது. அது எங்கே ?....

அவன் ஆறும் நம்பர் பஸ் 'க்யூ'வில் நின்ற போது கவனித்தான். சுந்தரமும் ஒரு பிரஞ்சுப் புத்தகத்தைக் கையில் வைத்துக் கொண்டு படித்தவாறு நின்று கொண்டிருந்தான். அவன் சைக்கிள் என்னவாயிற்று ? எதற்கு 'க்யூ'வில் வந்து நிற்கிறான் ?

சுந்தரம் ஒரு விசித்திரமான ஆசாமி. முப்பது வயது ஆவதற்குள் தலை நரைத்து விட்டது. ஒவ்வொரு நரை மயிருக்கும் அவன் படித்த ஒவ்வொரு புத்தகந்தான் காரணம். ஒரு நாள் சாத்ரேயின் சிஷ்யன், மற்றொரு நாள், சாண்ட்யாயனுவின் சிஷ்யன், இன்னொரு நாள் பிராட்லி, ஜோப்பர்ஸ், கில்சன் மூவரையும் போட்டுக் குழப்பிக் கொண்டிருப்பான். நாலாவது நாள், ஆல்டஸ் ஹக்ஸ்லி சொன்னது சரி, 'நம் இந்திய வேதாந்தத் தத்துவங்களுக்கு ஈடாக உலகில் ஒன்றுமே கிடையாது' என்பான். ஆனால் அவன் தலையெழுத்து, அவன் பார்த்து வந்த வேலையோ ஹோம் மினிஸ்டிரியில், பெண் உத்தியோகஸ்தர்களின் மகப்பேறு விடுமுறையைக் கணக்கிட்டு நிர்வகிக்கும் பொறுப்புதான்.... அவனுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. அதனால்தான், தலையில் இன்னும் சில மயிர்கள் கறுப்பாக இருந்தன.

''ஹல்லோ, சுந்தரம்....'' என்று மெதுவாகக் கூப்பிட்டான் சங்கரன்.

சுந்தரம் திரும்பிப் பார்த்தான். அவன் சங்கரனுக்கு முன்னால் நாலைந்து பேரைத் தாண்டி நின்று கொண்டிருந்தான். தன் இடத்தை விட்டுச் சங்கரனிடம் வந்தான் சுந்தரம்.

''இன்னிக்கு பஸ் என்ன அதிர்ஷ்டம் செஞ்சுது ?'' என்றான் சங்கரன்.

''என் ரோல்ஸ்ராய்ஸ் சர்வீஸுக்குப் போயிருக்கு'' என்றான் சுந்தரம். சங்கரனுக்கு முன்னால் ஒரு தமிழ்ப் பெண் நின்று கொண்டிருந்தாள். அவள் இலேசாகப் புன்னகை செய்தாள். அவளிடம் சுந்தரம் சொன்னான். ''நீங்க கொஞ்சம் முன்னாலே போறீங்களா? உங்க இடத்திலே நான் நிற்கிறேன் ?''

''ஓ.... எஸ்...'' இதைச் சொல்வதற்குள் அவள் தோள்கள் இருமுறை குலுங்கி ஓய்ந்தன.

'' நான் 'ஷிப்ட்' பண்ணப் போறேன்'' என்றான் சங்கரன்.

'' எங்கே?''

''பதினாறும் பிளாக். 259.''

''மைகாட்.... ரமணி வீடா ?''

''என்னப்பா, 'மைகாட்' ?''

''பெரிய இடத்துக்குத்தான் போறே. பிராபல்யமான மனுஷன்.''

''எஸ்... ஐ நோ !''



''ஒரு நாள் பாரு, அவன் குதப் மினுரையும், செங்கோட்டையையும் 'வித்'துடப் போருன்... அவ்வளவு கேப்பபிள் பெல்லோ...''

''நான் ஆச்சரியப்படமாட்டேன்...''

''உனக்கேனப்பா அவன் விட்டு வாசம்? அமைதியான வாழ்க்கை, உனக்கு அலுத்துப் போச்சா?''

''அவன் விடு 'கிரவுண்ட் ஃப்ளோர்'. அதனுலே பார்த்தேன்.....''

''ஆமு, அவன் செய்யறதெல்லாம் 'அண்டர்கிரவுண்ட்' விவகாரமாச்சே!'' சுந்தரம் இவ்வாறு சொல்லிக்கொண்டே சங்கரனுக்கு மிக அருகில் வந்து கிசுகிசுத்தான்... ''டு யூ நோ, ஹோம் மினிஸ்டிரி ஈஸ் வாட்சிங் ஹிம்.....''

சங்கரன் சிரித்தான்.

'' எதுக்கப்பா சிரிக்கிறே?''

''உங்க 'ஹோம் மினிஸ்டிரி வாட்ச் பண்ணற அழகு எனக்குத் தெரியாதா? உங்க சி.பி.ஐ. கட்டடத்தையே விலைக்கு வித்துடுவான் அவன்!''

''என்னமோப்பா.... நான் உன்னைச் சரியான வேளையிலே அட்வைஸ் பண்ணலேன்னு பின்னுலே சொல்லாதே....!''

''தீது ஒன்றும் பிறர் தர வாரா.''

''என்ன சொல்றே?.... தமிழ்லே சொல்லு.....''

சங்கரன் புன்னகை செய்தான். ''உனக்குப் பிரஞ்சு தெரியாதுன்னு எனக்குத் தெரியாது.''

''என் காலை வாரி விடறேயே....'' என்று சொல்லியவாறு கையிலிருந்த பிரஞ்சுப் புத்தகத்தைப் 'பாண்ட்' பைக்குள் போட்டுக் கொண்டான் சுந்தரம்.

''என் காலை யாரும் வாரி விட வேண்டிய அவசியம் இல்லை'' என்ருன் சங்கரன்.

''டோண்ட் பி ஸில்லி...'' அவன் மிகுந்த பரிவுடன் சங்கரனின் தோளைத் தொட்டான்.....

அன்று மாலை 'பார்க்'கில் கோபுவைச் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையுடன் சங்கரன் வெகுநேரம் காத்திருந்தான். ஆனுல் கோபு வரவில்லை. அவனுக்கு என்னவோ போல் இருந்தது. கோபு ஏன் வரவில்லை? உடம்பு சரியில்லையா?

அவன் 'பார்க்'கை விட்டு வெளியே வந்தான். கோபு வந்து கொண்டிருந்தான். ஆனுல் தனியாக வரவில்லை. அவனுடன் அவன் அம்மாவும் இருந்தாள்.

''நமஸ்காரம்'' என்ருன் சங்கரன்.

கோபுவின் அம்மா புன்னகையுடன் தலையசைத்தாள்.

''உங்களைப் பார்க்கலாம் என்றுதான் வந்தோம்'' என்ருள் அவள்.

''என்னையா?'' சங்கரனுக்கு இதற்கு மேல் என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

''ஆமாம்.''

''என்ன விஷயம்?''

''கோபு உங்ககிட்டே எல்லாம் சொன்னதாகச் சொன்னுன். ஆனு அவனுக்கு அனுதாபம் காட்டணும்கிற எண்ணத்தோட நீங்க எங்காத்துக்குக் குடி வரதா இருந்தா, அது வேணும்னு சொல்ல வந்தேன்.....''

''எது வேண்டாம்? அநுதாபம் காட்டறதா, நான் குடி வரதா?''

அவள் உடனே பதில் சொல்லவில்லை. அவள் கவனம் வேறு பக்கம் திரும்பியது. ஐந்தாறு பஞ்சாபிப் பெண்கள் உற்சாகத்துடன் பேசிக் கொண்டு போவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''இரண்டுமேவா?'' என்று கேட்டான் சங்கரன்.

அவள் பதில் கூருமல் புன்னகை செய்தாள்.



''நான் என் சௌகரியத்துக்காக, எனக்காக உங்க வீட்டுக்குக் குடிவரக் கூடாதா?''

அவள் எதற்கும் பதில் சொல்லவில்லை. மௌனமாக இருந்தாள்.

''அப்படியானுல் உங்களுக்கு விருப்பமில்லை யென்ருல்...'' சங்கரன் அதற்குமேல் சொல்லாமல் நிறுத்திஞன்.

''உங்களுக்கு அவர் தரேன்னு சொன்ன

'ரூம்' நாலு நாள் முன்னுல்தான் காலி யாச்சு. முன்னுலே இருந்தவர் ஏன் போனுர் தெரியுமா?''

''ஏன்?''

''அவர்....'' கொஞ்சம் தயங் கினுன். ''கோபு பேரிலே அநுதாபம் கொண்டு... அவனுடை அப்பா அவனே அடிக்கிற போது தடுக்க வந்தார். அவரோட ஆதரவு அவனுக்கு அதிக மாக அடியை வாங்கித் தந்ததுதான் மிச்சம்.....''

ஒரு சங்கடமான அமைதி நில வியது. இந்த மாதிரி இருக்கும் ஒரு பையனே அடிக்கும் தகப்பன், மனிதனு? மிருகமா? சங்கரனுக்கு உடம்பை என் னவோ செய்தது.... ரமணிக்கு யார் மீது கோபம்? இவ்வாறு அடித்து அடித்துத் தன்னேத் தானே வருத்திக் கொள்கின்ருனு?... 'தன் மீதுள்ள கழிவிரக்கந்தான் ஒருவனே மிருகத்தன மாக நடந்து கொள்ளச் செய்கின் றது' என்று அவன் எப்பொழுதோ படித்த ஞாபகம். வேடிக்கையாக இருந்தது அவனுக்கு. ஏனெனில், அந்தக் கணத்தில் அவனுக்கு ரமணி யின் மீது அநுதாபம் ஏற்பட்டது. திடீரென்று தோன்றிய அந்த உணர்வு அவனுக்கு நியாயமாகவும், நாணய மாகவும் பட்டது.

''கோபு என்ன சொல்ருன், நான் வரலாமா, கூடாதா?'' என்று கோபு வைப் பார்த்தான் சங்கரன்.

கோபு பதில் சொல்ல வில்லே. அவன் அம்மாவின் முகத்தைப் பார்த் தான்.

''நான் நீங்க வரக் கூடாதுன்னு சொல்லலே.... ஆத்துக்கு வந்தாலும், அவன்கிட்டே அநுதாபம் காட்ட வேண்டாம்னேன்..... அவனுக்கு அடி தான் ஜாஸ்தியாயிடும்.''

''எனக்கு....'' சங்கரன் சொல்லத் தயங்கினுன்.

''என்ன..... சொல்லுங்கோ....''

''யார் 'ஸிக்'னு புரியலே. கோபுவா, அவன் அப்பாவான்னு....''

''நாம எல்லாருமே ஒவ்வொரு விதத்திலே 'ஸிக்' இல்லேயா?''

அவன் ஆச்சரியத்துடன் அவளேப் பார்த்தான். இதை அவளிடமிருந்து அவன் எதிர்பார்க்க வில்லே. அவன் வியப்பு தீருவதற்குள் அவள் முறுவ லித்துக் கொண்டே சொன்னுள். ''சரி, நாங்க வர்ரேம்....''

இருவரும் திரும்பிச் செல்வதைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந் தான் சங்கரன். பெண்களுக்குச் சற்றுக் கூடுதலான உயரத்துடன் கூடிய கோபு வின் அம்மா மகனின் கைகளேப் பிடித் துக் கொண்டு தெருக் கோடியில் சென்று கொண்டிருந்தது. மனம் குழம்பியிருந்த அவனுக்கு, நிழற்படம் போல் தோன்றியது....

'நாம எல்லோருமே ஒவ்வொரு விதத்திலே 'ஸிக்' இல்லியா?' சங்கரன் இதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே போனுன். எவ்வளவு வாஸ்தவமான கூற்று? 'ஹிட்லர் ஒரு வியாதிக்காரன், ஸ்டாலின் ஒரு வியாதிக்காரன்....'

''உன் புது ஃப்ரெண்டோட சேர்ந்து நீயும் சி. பி. ஐ. யை விலேக்கு வாங்க லாம்னு உத்தேசமா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தான் சுந்தரம்.

சங்கரன் சுந்தரத்தைப் பார்த்ததும் புன்னகை செய்தான்.

''இல்லே.... 'எம்பையர் ஸ்டேட் பில்டிங்கை' வாங்கலாம்னு பார்க் கிறேன்....''

''குட்.... உனக்கு ஆசை அதிக மாக இருக்குன்னு யாரும் சொல்ல மாட்டா....''

''தாங்க்யூ.... பை தி வே, ரமணி யோட மிஸஸ் என்னே இப்போ பார்க்க வந்தா....''

''எதுக்கு?'' சுந்தரத்தின் குரலில் இப்பொழுது உண்மையாகவே அக் கறை தொனித்தது.

சங்கரன் அவள் கூறியதைச் சொன்னுன். அதைக் கேட்டு விட்டுச் சுந் தரம் சிறிது நேரம் பேசாமலிருந்தான்.

''நீ என்ன நினேக்கிறே?'' என்று கேட்டான் சங்கரன்.

''நீ அங்கே குடி போக வேண் டாம்னுதான் தோணறது....'' என் ருன் சுந்தரம்.

''ஏன்?....''

''ரெவுன்ட் ஃப்ளோர்ங்கிற சௌக ரியத்தைத் தவிர, இட் ஈஸ் நாட் ஏ ப்ளேஸ் ஃபார் யூ... அவ்வளவு தான் என்னுலே சொல்ல முடியும்....''

''மிஸஸ் ரமணி பார்க்கிறதுக்கு 'கிரேஸ் ஃபுல்'லா இருக்கா...''

''உன்னுடைய அநுதாபம் உண்மை யிலே யாருக்கு? கோபுவுக்கா, இல் லாட்டா அவன் அம்மாவுக்கா?''

''வெளிப்படையாச் சொல்லட்டுமா? என் அநுதாபம் ரமணிக்கு....''

''ரமணிக்கா? வாட் டு யூ மீன்...?''

''அதுதான் எனக்கும் புரியலே...'' என்ருன் சங்கரன். அவன் குரல் அவ னுக்கே விசித்திரமாக ஒலித்தது.

(தொடரும்)

# காணாமல் போனதைக் காணலாம்!

பண்வெட்டி, தர்மா மீட்டர், சைக்கிள், எம். ஜி. ஆர். போட்டோ அடங்கிய மணி பர்ஸ், குடை, டார்ச் லைட், காமிரா, மகளிர் டம்பப் பை, பேனா, தாலிச் சரடு, கைக் கடிகாரம், ரவிக்கைத் துண்டு, கைக் குட்டை....

இதென்ன புது மாதிரிப் பட்டியல்? ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத சாமான்களாயிருக்கின்றனவே? இது போன்ற பொருள்கள் எல்லாம் ஒரே இடத்தில் கிடைக்கும்படி புதிதாக 'டிபார்ட் மெண்டல் ஸ்டோர்' எங்கேயாவது திறந்திருக்கிறார்களா என்று கேட்கிறீர்களா? கடைகளுக்குச் சென்று அலைய வேண்டியதில்லை. சோதிடரைக் கேட்பதற்கு முன்னால், நேராக போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்குச் சென்று விசாரியுங்கள்,-எங்கேயாவது சினிமாக் கொட்டகையிலோ அல்லது கடை வீதியிலோ நீங்கள் கைதவறி நழுவ விட்ட உங்களுடைய பொருள்களை திரும்பக் கிடைக்கும் வாய்ப்பு உண்டு. வியப்பாக இருக்கிறதா? கடந்த 1968ம் ஆண்டில் சென்னை நகரில் மக்கள் பல்வேறு இடங்களில் மறதியாக விட்டுச் சென்ற 3191 சாமான்கள் போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்கு வந்து சேர்ந்துள்ளன! இவற்றில் பல, உரிமையாளர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. சரியான உரிமையாளர் யார் என்று நிர்ணயிக்க முடியாத நிலையில், பொருள்கள் ஏலத்துக்கு விடப் பெறுகின்றன.

பரவலாகப் பல்வேறு இடங்களில் விழும் மழைத் துளிகள் சிறு சிறு வாய்க்கால்களாகி, ஆறாகப் பெருகியோடி இறுதியில் கடலில் போய்ச் சேர்ந்து விடுவதே போல், அடையாறு, வண்ணாரப் பேட்டை, புரசை, மயிலை ஆகிய பல்வேறு பகுதிகளில் பொது இடங்களில் மக்கள் மறதியாக விட்டுச் சென்ற பொருள்கள் எழும்பூரிலுள்ள இந்த அலுவலகத்துக்கு எப்படி வந்து சேருகின்றன என்பதைப் பார்க்கலாம்:

நடைபாதையில் கிடக்கும் பேனாவைக் கண்டெடுத்த ஒருவர் அதனை அண்மையிலுள்ள காவல் நிலையத்தில் ஒப்படைக்கிறார். பேனாவின் பெயர், நிறம், கொண்டு வந்து கொடுத்தவரின் பெயர், முகவரி முதலிய விவரங்களையெல்லாம் காவல் நிலையத்தில் பதிவு செய்து, இவ்விதம் நிலையத்துக்கு வந்து சேரும் பொருள்களையெல்லாம் அவற்றின் முழு விவரங்களுடன் போலீஸ் கமிஷனரின் அலுவலகத்துக்கு ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட ஒரு தேதியில் அனுப்பி வைக்கிறார்கள். 10ம் தேதியிலிருந்து 20ம் தேதிக்குள் ஒவ்வொரு காவல் நிலையத்துக்கும் ஒரு தேதி குறிக்கப்பட்டுள்ளது. பல்வேறு காவல் நிலையங்களிலிருந்தும் கமிஷனர் அலுவலகத்துக்கு வந்து சேரும் பொருள்கள் பற்றிய முழு விவரங்கள் பிரதி மாதமும் 'கெஜட்'டில் பிரசுரிக்கப்படுகின்றன.

"உரிமையாளர் வந்து அடையாளம் கூறித் தம் பொருளைக் கேட்டால், அவரிடம் ரசீது பெற்றுக்கொண்டு கொடுத்து விடுவார்களா?"

"கொடுத்து விடுவார்கள். ஆனால், பொருளின் மதிப்பு எவ்வளவோ அதில் நாங்கில் ஒரு பங்கு ரொக்கமாகப் பணம் கொடுத்து விட்டுப் பெற்றுக் கொள்ளலாம்."

"இவ்விதம் வசூலிக்கப்படும் தொகையை என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டதற்கு இந்த இலாகாவின் நேரடிப் பொறுப்பினை வகிக்கும் உதவி கமிஷனர் திரு கே. வி. சுப்பிரமணியன் அளிக்கும் விளக்கம்:

"அந்தப் பணத்தை, குறிப்பிட்ட பொருளைக் கண்டெடுத்துக் காவல் நிலையத்தில் சேர்ப்பிக்கிறவருக்கு வெகுமதியாக வழங்கி விடுகிறோம். பொருளின் மதிப்பு ரூ. 50க்குள் இருந்தால் இருபத்தைந்து சதவிகிதமும், ஐம்பது ரூபாய்க்குமேல் போனால் பத்து சத விகிதமும் உரிமையாளரிடமிருந்து வசூலித்து, கண்டெடுத்தவருக்கு வழங்கி வருகிறோம்."

"உரிமையாளர் யாரும் வராவிட்டால் அந்தப் பொருளை என்ன செய்வீர்கள்?"

"கண்டெடுத்தவரிடம் கொடுத்து விடுவோம். இதில் ஒரு நற்பலனும் உண்டு. கண்டெடுத்த பொருளைக் காவல் நிலையத்தில் ஒப்படைக்க வேண்டும் என்ற நல்லெண்ணம் வளர இது ஒரு தூண்டுகோலாக அமையும். உரிமையாளர் தான் இழந்த பொருளைத் தேடி வந்து பெற்றுக் கொண்டாலும், கண்டெடுத்தவருக்கு வெகுமதி கிடைக்கும். உரிமையாளர் வராவிட்டால், கண்டெடுத்தவருக்கே அது கிடைத்து விடும். எனவே, பிறர் பொருள் ஏதாவது வழியில் கிடந்தால், அதை யாருமறியாமல் தானே எடுத்துக் கொண்டுவிட வேண்டும் என்ற கெட்ட எண்ணம் வளராமல் தடுக்க இந்த ஏற்பாடு உதவுகிறதல்லவா?"

மெய்தான். போலீசாரின் இந்தச் சேவையில் பொதுமக்களும் ஒத்துழைத்தால் நல்லது தான்.

இதில் இன்னொரு முக்கியமான விஷயம் என்னவென்றால், போலீஸ் இலாகா சிப்பந்திகளோ அல்லது மக்கள் சேவையில் ஈடுபட்டுள்ள அலுவலர்களோ வழியில் கிடைத்த பொருளைக் கண்டெடுத்துக் காவல் நிலையத்தில் ஒப்படைத்தால் அவர்களுக்கு வெகுமதி ஏதும் கிடைக்காது. அது அவர்களின் கடமை அல்லவா?

"காவல் நிலையங்கள் தவிர, இவ்விதம் கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் வேறு எங்கிருந்தாவது போலீஸ் கமிஷனரின் அலுவலகத்துக்கு வந்து சேருவதுண்டா?"

"அரசாங்கப் போக்குவரத்து இலாகாவிலிருந்தும் மாதம் ஒருமுறை பல சாமான்கள் வருவதுண்டு. பேருந்து வண்டிகளில் மக்கள் மறதியாக விட்டுச் சென்ற பொருள்களைப் போக்குவரத்துத் துறையினர் கமிஷனரின் அலுவலகத்துக்கு அனுப்பி விடுகிறார்கள்."

"கூடுதலான விலைமதிப்புள்ள பொருள்கள் உதாரணமாக, தங்க நகைகள், வைரம் பதித்த ஆபரணங்கள் இவை உங்கள் அலுவலகத்துக்கு வந்து சேருவதுண்டா?" என்று கேட்டதற்கு உதவி கமிஷனர் கூறுவதைக் கேளுங்கள்:

"தங்கக் கட்டுப்பாடு அமுலுக்கு வந்த

பிறகு. தங்க நகைகளை ஏலத்தில் விற்க இயலாது. எனவே, உரிமையாளர் யாரும் வந்து பெற்றுக் கொள்ளாத பொன் ஆபரணங்களை மத்திய அரசாங்கத்திடம் சேர்ப்பித்து விடுவோம். அதற்குரிய தொகை நம் மாநில அரசுக் கணக்கில் ஈடு செய்யப் பெறும். பொதுவாக, மருத்துவ மனைகளிலிருந்து தான் சில நகைகள் வரும். ஊர் பேர் தெரியாத அநாதைகள் யாராவது மருத்துவ மனைகளில் இறந்து விட்டாலோ, அல்லது விபத்துக்களில் உயிரிழந்தவர்களின் பெயர், முகவரி தெரியாவிட்டாலோ அவர்கள் அணிந்துள்ள நகைகளை இங்கு அனுப்பிவிடுவார்கள். சில சமயம் இறந்தவர்களின் உறவினர்கள் அந்தப் பொருள்களைப் பெற்றுக் கொள்ள வருவார்கள். ஆயிரம் ரூபாய்க்கு மேல் விலைமதிப்புள்ள பொருள்களாயிருந்தால், உரிமை கோரி வருகிறவர் இறந்தவரின் சரியான வாரிசு என்பதற்கு அத்தாட்சி (Succession Certificate) சமர்ப்பிக்க வேண்டும் என்பது விதி. நான்தான் வாரிசு என்று இரண்டு மூன்று பேர் போட்டி போட்டுக் கொண்டு வரும் போதும் இத்தகைய அத்தாட்சியின் பேரில்தான் பொருள்களைக் கொடுப்பது வழக்கம். பின்னால் வம்பு, வழக்கு ஏதும் வராமலிருக்க வேண்டும் அல்லவா?''

போலீஸ் கமிஷனரின் அலுவலகத்துக்கு வந்து சேரும் பொருள்களை எல்லாம் முழு விவரங்களுடன் பதிவு செய்து, பார்வையாளர்களுக்கு நன்கு தெரியும்படி கடைகளில் வைப்பது போல் கண்ணாடி பீரோவில் வைத்து அந்த அறையைப் பூட்டி வைத்துப் பாதுகாக்கும் உதவி காஷியர் திரு எல். ராமநாதன், ''இப்போது எங்களிடம் 128 சைக்கிள்கள் உள்ளன; வந்து பார்க்கிறீர்களா ?'' என்று கேட்டார். ''பாருங்களேன்'' என்றார், உதவி கமிஷனர் திரு கே. வி. சுப்பிரமணியன்.

''பார்த்தால் மட்டும் போதாது ; புகைப் படமும் எடுக்க வேண்டும்'' என்று அனுமதி கோரினேன். உடனடியாக அனுமதி வழங்கி விட்டார், கமிஷனர் திரு பி. குப்புசாமி.





இரு பூட்டுக்கள் போட்டுப் பூட்டி பந்தோபஸ்து செய்து வைத்திருக்கும் அந்த அறைக்குள், அடேயப்பா ! எத்தனை சைக்கிள்கள், வரிசை வரிசையாக ! சென்னை நகரிலுள்ள எந்தப் பெரிய சைக்கிள் கடையிலும் ஒரே சமயத்தில் இவ்வளவு சைக்கிள்களை நான் பார்த்ததில்லை !

இப்படிப் பொறுப்புடன் சென்னை போலீஸ் இலாக்கா, ஞாபக மறதியாளர்களுக்கு அரும் சேவை செய்து வருவதை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

அவர்களைவிட மறதியின்றித் தங்கள் பொருள்களைக் கவனமாகப் பார்த்துக் கொள்பவர்களை அதிகமாகப் பாராட்ட வேண்டுமல்லவா ?

— பாணன்



**போலீஸ் கமிஷனரின் அலுவலகத்தில் காணாமல் போனவற்றைப் படமெடுக்கப் பார்வையாக வைத்திருக்கிறார்கள்.**

- ஏராளமான சைக்கிள்கள்.
- டிரான்ஸிஸ்டர் முதல் மணிபர்ஸ் வரை.
- பன்னீர்ச் சொம்புகள் கூடக் காணாமல் போய் இங்கு வந்து சேருகின்றன.

புகைப்படங்கள்: **விசுவநாதன்**

# தீராத் விளையாட்டு

கு. அழகிரிசாமி

## அத்தியாயம் 23

'நானும் விஜயாவும் கல்யாணம் பண்ணிக் கொள்வதை நீ ஆசிர்வதிப்பாயா?' என்று ரங்கராஜன் ஓர் உணர்ச்சிப் பெருக்கில் தாயாரிடம் கேட்டு விட்டான். மறுநாள் அதை நினைத்துப் பார்த்த போது அவனுக்கே சங்கோசமாக இருந்தது. தாயாரைப் பார்ப்பதற்கும் சிறிது கூசினான்; சிறிது நிறைவும் செய்தான். ஆனால் விஜயா வழக்கம்போல் அவன் வீட்டுக்கு வரவும் போகவுமாக இருந்தாள். அவள் வரும் போது ரங்கராஜனின் சங்கோசமும் நிறைதலும் அதிகரித்துக் கொண்டிருந்தன. அவள் வந்திருப்பது தெரிந்தால், எப்போதும் ஓடி வந்து அவளைப் பார்க்கும் ரங்கராஜன், இப்போது வேறு விதமாக நடந்து கொள்ளத் தொடங்கினான். ஒரு நாள் அவளும் தாயாரும் பேசிக் கொண்டிருந்த போது மிகவும் அவசரமாக அருகில் வந்து, வெளியில் கொஞ்சம் வேலை இருப்பதாகச் சாக்குச் சொல்லி விட்டுப் போனான். அடுத்த நாள் ஒருவரிடமும் சொல்லிக்



கொள்ளாமலே ரகசியமாகத் தப்பி ஓடுபவன் போல் வீட்டை விட்டு வெளியே சென்றான். விஜயா இருக்கும் இடத்துக்குச் சென்றால், தாயார் தன்னை ஒரு புதுக் கண்கொண்டு பார்ப்பாள் என்று அவன் நினைத்தான். விஜயாவுடன் பேசும்போது, தனது ஒவ்வொரு சொல்லையும் அவள் கண்டிப் பார்ப்பாள்; ஒவ்வொரு சுவாசத்துக்கும் ஒரு விசேஷ முக்கியத்துவம் கொடுப்பாள்; முக பாவங்களையும் படம் பிடித்துக் கொண்டே இருப்பாள்.

அந்தச் சமயத்தில் தான் ஏதோ பராமுகமாகப் பேசுவது போல் நடிக்க வேண்டியிருக்கும். அந்த நடிப்பில் கொஞ்சம் இடறி விழுந்தாலும் பேந்தப் பேந்த விழிக்கும்படி ஆகி, அம்மாவின் பரிகாசத்துக்கும் உள்ளாக நேரிடும். இப்படியெல்லாம் நினைத்துத் தான் அவன் விஜயாவின் அருகில் வரவே கூசி வெளியே நழுவி ஓடிக் கொண்டிருந்தான்.

பொழுதைப் போக்கிவிட்டு வருவதற்காகத் தனியே தெரு வழியே நடந்து செல்லும் போதும், கோவிலில் போய் உட்கார்ந்திருக்கும்போதும் விஜயாவையும், தன் எதிர்காலத்தையும், சென்னையில் ராஜகோபாலனைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்ததையும் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். இவற்றையெல்லாம் நினைத்து முடித்தபின், சித்தப்பா, முத்துக் குமார், கல்லூரி நாட்களில் தன்னிடம் கடன் வாங்கி



பானு — இவர்களைப் பற்றியும், கடைசியாகச் சன்னசிப் புதூர் கிராமத்தைப் பற்றியும் சிந்தனை செய்வான். அப்புறம்தான் வீடு திரும்புவான்.

அவனுடைய இந்தப் புதிய போக்கை விஜயா வேறு விதமாக அர்த்தப் படுத்திக் கொண்டாள். அவனுக்கு அவசரமான வெளி வேலைகள் இருப்பது போல் அவள் கருதினாள். அவசர வேலைகளைத்தான் முதலில் கவனிக்க வேண்டும் என்று நினைத்தாலும், அவனோடு நின்று பேச முடியவில்லையே என்று அவளுக்கு ஏமாற்றமாக இருந்தது; ஏக்கமாகவும் இருந்தது. மூன்றாவது நாள் ஞானம்பாளையே கேட்டு விட்டாள்: ''அவருக்கு வேலை ஜாஸ்தியோ? ஒரு நிமிஷம் வீட்டிலே இருக்க முடியல்லையே?''

''வேலை இருக்கும். சும்மா எதுக்கு வெளியே போறான்?'' என்று பதில் அளித்து முடித்த ஞானம்பாள், அடுத்த நிமிஷமே, ''சாத்தூருக்கு வேறே போக வேண்டியிருக்கு. அந்தக் காரியமா வெளியே போயிட்டு வர்றானோ என்னமோ?'' என்றும் சொன்னாள்.

''சாத்தூருக்குப் போகணுமா?'' — மிகவும் அவசரமாகவும் பதற்றம் அடைந்தவள் போலவும் கேட்டாள் விஜயா.

'' அவனும் அவங்க அப்பாவும் போயிட்டு வர வேண்டியிருக்கு. என்னமோ பத்திரம் ரிஜிஸ்தர் பண்ணணுமாம்.''

'என்ன பத்திரம்?' என்று கேட்பதற்கு விஜயா விரும்பினாலும் அவ்வளவு தூரம் குடும்ப விஷயங்களைத் துருவிக் கேட்க அவளுக்குத் தயக்கமாக இருந்தது. அப்படிக் கேட்பது ஒரு வேளை தவறாகக் கருதப்படுமோ என்று பயமும் உண்டாயிற்று. அந்தக் குடும்பத்தில் உள்ள சில சம்பிரதாயங்களைக் கண்டு ஏற்கனவே அச்சமும் வியப்பும் அடைந்திருந்த அவள், பத்திரத்தைப் பற்றி எதுவும் கேட்காமல், 'ஓ! அப்படின்னா இங்கே வேலை இருக்கத்தான் செய்யும்' என்று தனக்குத் தானே பேசிக் கொள்பவளைப் போல் சொல்லிக் கொண்டாள் விஜயா. அப்புறம் அதே தோரணையிலேயே, ''சாத்தூருக்குப் போனால் வர எத்தனை நாளாகுமோ?'' என்று ஒரு கேள்வியை — ஆவலைச் சற்றும் வெளியே காட்டிக் கொள்ளாமல் — கேட்டாள்.

''காலையிலே போயிட்டு ராத்திரியே வந்துடுவாங்க. அங்கே வேறே என்ன வேலை?''

விஜயாவுக்குச் சந்தோஷமாயிருந்தது.

அன்று சாயங்காலம் அவள் சற்றும் எதிர்பாராத விதத்தில் ரங்கராஜன் அவள் வீட்டுக்குச் சென்றான். அவனுடைய வருகை எல்லோருக்குமே ஆச்சரியமாக இருந்தது.

''கலா! இன்னிக்குக் கட்டாயம் மழை பெய்யப் போகுது....'' என்று விஜயா சொன்னாள்.

தங்கை அதைக் கேட்டு ரஸிக்கவோ, சிரிக்கவோ செய்யாமல், முகம் சிவக்க வெட்கம் அடைந்து தலையையும் குனிந்து கொண்டாள்.

''நாம்ப இந்தத் தெருவிலே இருக்கிறதா யாரோ போய்ச் சொல்லியிருக்கிறாங்க. 'சரி, பார்த்துட்டுப் போகலாமே'ன்னு வந்திருக்கிறார்!''

விஜயாவின் பரிகாச வார்த்தைகள் கலாவின் முகத்தை இன்னும் சிவக்க வைத்தன. ரங்கராஜனுக்கோ அவை மனத்தினுள் மூன்று நாட்களாக ஓடிக் கொண்டிருந்த சிந்தனைகளையெல்லாம் மறக்கடித்து விட்டு இன்பக் கிளுகிளுப்பை ஊட்டின. ஒன்றும் சொல்லாமல் சிரித்துக் கொண்டே நின்றான்.

அப்பொழுது அங்கே விஜயாவின் தாயார் கஸ்தூரியம்மாள் வந்ததும் பரிகாச விளையாட்டு நின்று விட்டது. அந்த அம்மாள் வரவேற்பதற்குமுன்பே அவன் வணங்கினான். முத்துக் குமார் சொன்ன செய்திகளைப் பின்னணியாக வைத்துக் கொண்டு அவளைக் கவனித்துப் பார்க்கவும் செய்தான்.

பொன்னிறம் கொண்ட அவளுடைய முகத்தில் அடக்கமான ஓர் அழகுடன் ஏதோ ஒரு மூலையில் அந்தரங்கமான ஒரு வேதனையும் குடிகொண்டிருப்பது போல் அவனுக்குத் தோன்றியது. வாய் திறந்து பேசும்போது, அந்த வேதனையே ஓர் அழகாக அவளுடைய இதழ்களில் நெளிந்தது. அது முகத்தின் புறச் சோபையைக் குறைத்துவிட்டாலும், அழகின் ஆத்ம சொரூபத்தை அங்கே பிரதிஷ்டை செய்திருந்தது. முகமும் அகமும் ஒன்றாகக் காட்சியளித்துக் கொண்டு நின்ற அந்தச் சௌந்தரியவதி அழகின் உறைவிடமாக எளிமைப்பட்டுத் தோன்றாமல் அழகு உறைந்திருக்கும் இடத்தைப் போல் இருந்தாள்.

க்ஷேம லாப விசாரிப்புக்குப் பிறகு, கஸ்தூரியம்மாள் அங்கே நிற்கவில்லை; உள்ளே போய் விட்டாள்.

''கலா! நீயும் உட்காரேன்'' என்றாள் விஜயா.

அவள் குனிந்த தலையுடன் வந்து ஒரு சோபாவில் அமர்ந்தாள்.

''கலா அந்தக் காலத்துப் பொண் மாதிரி. இந்தக் காலத்திலே பெண் களுக்கு இவ்வளவு அழகா முகத்தைக் கவிழ்த்துக் கொள்ளவும் தெரியாது. இவ்வளவு தூரம் முகம் சிவக்கும்படி வெட்கப்படவும் தெரியாது'' என்றான் ரங்கராஜன்.

உடனே விஜயா, ''நீங்க விளை யாட்டுக்குத்தான் சொல்கிறீர்களா?... நிஜமாகத்தான் சொல்லுகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''நிஜமாத்தான் சொல்றேன்.''

''அப்படின்னா, உங்களுக்கு இந்தக் காலத்துப் பெண்கள் எத்தனையோ பேரைத் தெரிஞ்சிருக்கணுமே! இல் லேன்னா இப்படிச் சொல்லத் தோணுதே!'' என்று பரிகாச விளை யாட்டைத் தொடர்ந்தாள் விஜயா.

ரங்கராஜன் சிரித்தான். பிறகு, ''எனக்கு இந்தக் காலத்துப் பெண்களில் (ஒரே ஒருத்தியை என்று சொல்ல வாய் வராமல்) — ஒரே ஒரு பெண்ணைத் தான் தெரியும்!'' என்றான்.

''யார் அது?''

''நீ....நீங்கதான்!''

இருவரும் சிரித்தார்கள்.

கலாவுக்கு அங்கே இருக்கவே முடிய வில்லை. ரங்கராஜனும் விஜயாவும் இப்படியெல்லாம் பேசிக் காதல் — சம் பாஷணைகளை நிகழ்த்துகிறார்கள் என்று அவள் நினைக்கவில்லை. அந்த மாதிரி விளையாட்டுக்காக நடிக்கிறார்கள் என்றே கருதினாள். காதல் நாடகத்தை, அல் லது நாடகக் காதலை ரங்கராஜனுடன் இருந்து பார்ப்பதும், ரங்கராஜனே அந்த நாடகத்தின் கதாபாத்திரமாக இருப்பதும்தான் அவளைச் சொல்ல முடியாத சங்கோசத்தில் ஆழ்த்தித் தலையைக் குனிந்து கொள்ளவும் செய்தன.

''நான் கொஞ்சம் உள்ளே போய்ட்டு வரட்டுமா?'' என்று கேட்டாள் கலா.

''ஏன்.... சரி, போய்ட்டே வா. போய், ஒரு தடவை மூச்சு விட்டுட்டு வந்து உட்கார். உனக்கு எங்கே இருந்து இன்னிக்குத் திடீர்னு இப்படி வெட் கம் வந்தது?...'' என்று விஜயா கேட்டுக் கொண்டிருக்கும்போதே கலா உள்ளே ஓடிவிட்டாள்.

அவள் போனதும் விஜயா தமா ஷைக் கைவிட்டு, ''வெள்ளிக் கிழ மையே நீங்க ஏன் மெட்ராஸிலிருந்து வரலை? உம்? திருப்பரங்குன்றத்துக்குப் போறதுக்கு நான் காத்துக்கிட்டிருந் தேன் தெரியுமா? கடைசியிலே என்னை ஏமாத்தியே போயிட்டீங்க... அடுத்த வெள்ளி வரப் போகுது'' என்று மனக்குறையைக் காட்டிக் கொண்டே பேசினாள்.

ரங்கராஜன் அவளைக் கூர்ந்து பார்த் தான். பொய்க் காரணத்தைச் சொல்லி அதையும் தமாஷாகச் சொல்லி அவ ளுக்குப் பதிலளிக்க அவன் விரும்ப வில்லை. அவளுடைய முகத்தின் அத் தனை ஆழமும் அத்தனை ஏமாற்றங் களும் அவனுடைய முகத்திலும் குடி யேறிவிட்டன.

''வந்திருக்கலாம்... என்னவோ, வர வில்லை'' என்றான் அவன்.

''மறந்துட்டீங்களா?''

''மறந்துட்டேன்னு நான் பொய் சொல்ல மாட்டேன். சொன்னாலும் நீ நம்ப மாட்டே'' என்று சொன்ன ரங்க ராஜன், சற்று நிமிர்ந்து உட்கார்ந்து, ''கடைசி வெள்ளிக் கிழமையன்னிக் குத்தானே அங்கே போகணும்னு நீ சொன்னே?'' என்று கேட்டான்.

''இப்பவும் அதைத்தான் சொல் றேன். கடைசி வெள்ளிக் கிழமை போய்த்தான் இப்போ அந்த நாள் ஆச்சு!''

''அட பாவமே!... என் தப்புத் தான். நான் இங்கிலீஷ் காலண்டரைப் பார்த்துப்பிட்டு ஏமாந்துட்டேன்.''

''ஒரு முக்கியமான நாள் எப்போ வர்றது என்கிறதைத் தெரிஞ்சுக்கிற திலே இப்படி அலட்சியமா யாரும் இருக்க மாட்டாங்க. ஆனால் உங் களுக்கு மட்டும் அப்படி இருக்க முடியுது.''

''நிஜமாச் சொல்றேன். எனக்கு அதுதான் கடைசி வெள்ளிக் கிழ மைன்னு தெரியாது.''

''நீங்க சொல்றது நிஜம் என்பதை நான் மறுக்கலையே! இப்படிப்பட்ட ஒரு நாளை முன்கூட்டியே நிச்சயம் பண்ணிக்காமல் அலட்சியமா இருந்த தைத்தானே நம்பறது கஷ்டமா இருக்கு.''

''விஜயா! போகட்டும். கடைசி வெள்ளிக் கிழமையை விட்டால், மற்ற வெள்ளிக் கிழமையிலே கோயிலுக்குப் போகக்கூடாதா என்ன? ஆண்டவனுக்கு எல்லாக் கிழமையும் ஒண்ணுதான். நாளைக்கே கூடப் போகலாம்னு...!''

''போகலாமா?''

''நிச்சயமாகப் போகலாம்.''

''நீங்க சாத்தூருக்குப் போக வேண் டிய காரியம் இருக்காமே? அம்மா சொன்னாங்க.''

''அங்கேயும் போகணும். அப்பா வும் சித்தப்பாவும் அது சம்பந்தமா லட் டர் எழுதிக்கிட்டிருக்காங்க. சித்தப்பா எப்போ வரச் சொல்லி லட்டர் போடு றாரோ அன்னிக்குப் போகணும். அநேக



# விஜிபி

# சுலபத் தவணைத் திட்டம்

விஜிபியில் சகாயமான விலையில் தரமுள்ள பொருள்களை வாங்குவது அனைவருக்கும் திருப்தியளிக்கிறது. யாவரும் விஜிபி தவணைத் திட்டத்தில் பொருள்கள் வாங்குவது மிகச் சுலபம்.



விஜிபி சுலபத் தவணைத் திட்டம் இப்பொழுது விஜிபி 'மொபைல் விற்பனை வேன்கள்' மூலம் உங்கள் வீடு தேடி வருகிறது.









## வி.ஜி. பன்னீர்தாஸ் & கோ.

சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 442333
கிளை : தி. நகர், சென்னை-17. போன் : 440246




தரமிகு பொருள்களின்
சிறப்புமிகு விற்பனையாளர்கள்

NAS-98 TH-A

மாக இரண்டு மூணு நாள் கழிச்சுப் போக வேண்டி யிருக்கும்.''

விஜயாவுக்கு அப்பொழுது தான் கலாவை இனி அழைக்கலாம் என்று தோன்றியது.

''கலா!''

அந்த ஒரே ஒரு குரலுக்கே அவள் எதிரில் வந்து நின்று விட்டாள். அவ்வளவு நேரமும் பக்கத்தில் மறைந்து நின்று கொண்டிருந்திருப்பாளோ என்று கூட ரங்கராஜன் நினைத்தான்.

''நானே திருப்பரங்குன்றம் போகலாமா? நீங்க என்ன சொல்றீங்க?'' என்று கலாவைக் கேட்டான் ரங்கராஜன்.

அவள் பதில் சொல்லவில்லை.

''எல்லோரும் போவோம். நீங்க உங்க அம்மா, நான், எங்க அம்மா— எல்லோருமே போகலாம்'' என்று ரங்கராஜன் சொன்னான்.

''கலா! என்னைத் தவிர எல்லாருமே!'' என்றாள் விஜயா.

''ஏன்?'' என்று கேட்டான் அவன்!

''என்பேரை நீங்கள் சொல்லலையே?''

சமத்காரமாக ஏதாவது சொல்லலாமென்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் அந்த விதமாக அவன் பேசவில்லை.

''மன்னிக்கணும். சில சமயங்களிலே எதை மறக்கவே முடியாதோ அது மட்டுமே மறந்து போறதும் உண்டுன்னு இப்போ தெரியுது. ஒரு பழமொழியும் சொல்லுவாங்க...'' என்று சொல்லிக் கொண்டே ரங்கராஜன் மீதிச் சொற்களை விழுங்கினான்.

''என்ன பழமொழி?'' என்று கேட்டாள் விஜயா.

''அதைச் சொல்ல வேண்டாம்.''

''ஏன்?''

ரங்கராஜனுக்கு எக்கச் சக்கமாக இருந்தது.

''சொல்லுங்க. நாங்களும் தெரிஞ்சுக்கிறோம்!''

''விஜயா! சொல்லத்தான் வேணுமா? ...சரி, சொல்றேன்: கல்யாண அவசரத்திலே தாலி கட்ட மறந்த மாதிரின்னு சொல்வாங்க!''

கலாவின் முகம் அப்போது கோவைப் பழமாகச் சிவந்து விட்டது.

விஜயாவோ உரக்கச் சிரித்தாள். அவள் சிரித்தாலும் ரங்கராஜனுக்கு அந்தப் பழமொழியைச் சொன்னது நாகக்கில்லாத ஒரு செயலைப் போலவே தோன்றி விட்டது. எனவே மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

விஜயா சம்பந்தப்பட்ட விஷயத்தில் அதுவும் கலாவை முன்னால் வைத்துக் கொண்டு — இந்தப் பழமொழியை

# உவகை தரும் உவமை

கூட்டிலே அடைக்கப்பட்டிருக்கும் பொழுதும், புலியானது எப்படி வலிமையுடனும், அச்சம் உண்டாக்கும் படியும் வாழுமோ, அது போலவே பகைவர்களின் சிறையிலே கைதியாக அடைபட்டிருந்த பொழுதும், கரிகால்



வளவன் மிகுந்த ஆற்றலுடனும், எதிரிகளுக்கு அச்சம் மிகும்படியாகவுமே வாழ்ந்தான் !

- பட்டினப்பாலை - கடியலூர் உருத்திரங் கண்ணனார்

''உவகை தரும் உவமை''களைத் தொகுத்து அளித்தவர்: — தமிழ்முடி

—'கல்யாணமும், தாலியும்' சம்பந்தப்பட்ட ஒரு பழமொழியை— சொன்னது தவறான காரியம்.

ரங்கராஜன் எழுந்து நின்று, ''நான் வீட்டுக்குப் போகணும். கலா! நாம்ப நாளைக்குப் போகலாமா?'' என்று கேட்டு அதன்மூலம் தன் 'தவறை'யும் மழுப்பி விட்டான்.

''போவோம்'' என்றாள் கலா.

''வெரி குட்!'' என்று சொல்லிவிட்டு ரங்கராஜன் உடனே அங்கிருந்து புறப்பட்டும் விட்டான்.

அன்றையதினம் கடைசி வெள்ளிக் கிழமையாகவோ, அல்லது கிருத்திகையாவோ இல்லாமல் இருந்தும் கூடத் திருப்பரங்குன்றம் முருகன் கோவிலில் கூட்டம் சற்று அதிகமாகவே காணப்பட்டது. அப்போது மணி ஐந்துக்கு மேல் இராது. தினந்தோறும் மதுரையிலிருந்து வரக் கூடியவர்கள் சாதாரணமாக ஐந்து மணிக்கு

மேல்தான் அங்கே வந்து சேருவார்கள். உள்ளூர் பக்தர்களும் ஐந்து மணிக்கு முன்னதாகக் கோவிலுக்கு வருவது அபூர்வம். ஆனாலும் அன்று ஒரு விசேஷ தினம் போல் கோவிலில் கூட்டம் நிறைந்திருந்ததற்கு முக்கிய காரணம், அவ்வூர்ச் சத்திரங்களில் அன்றைய தினம் எட்டுக் கல்யாணங்கள் நடைபெற்றதுதான். கல்யாண விட்டுக்காரர்கள் அத்தனை பேரும் கூடித் தெருவிலும் கோவிலிலும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். கோவில் அருகிலேயே ஒரு டூரிஸ்ட் பஸ் நின்றது. அதில் வந்த சுமார் நாற்பது பேரும் கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து கொண்டார்கள். கோவிலை நோக்கிச் சென்று கொண்டிருக்கும்போதே ''இன்னிக்கு என்ன இவ்வளவு கூட்டம்?'' என்று கேட்டான் ரங்கராஜன்.

''தெரியல்லியே!'' என்றாள் விஜயா.

''இன்னிக்குக் கடைசி வெள்ளிக் கிழமை கூட இல்லே. வெறும் வியாழக் கிழமைதான்....?''

''ராமர் போன இடம் அயோத்தி! உங்களுக்காக வியாழக் கிழமையே கடைசி வெள்ளிக் கிழமையா மாறிட்டது போலிருக்கு!... இது ராமர் கூடச் செய்ய முடியாத காரியம்! அவர் வேணும்னு நாம் போற இடத்தை அயோத்தியா மாத்துவார். அது சாதாரண காரியம்தான். ஒரு பெரிய 'ஏரியா'வை டவுனு மாத்தறதுக்கு ராமரா வரணும்? மனுஷனே அதைச் செய்துடுவான். ஆனால் ஒரு கிழமையை இன்னொரு கிழமையா மாத்தறது இருக்கே, அது யாராலும் முடியாத காரியம் — உங்களைத் தவிர!''

''விஜயா! நீ தமாஷுக்குச் சொன்னாலும் — அப்படித்தான் சொல்றே— ராமனைச் சொன்ன வாயாலே என்னைச் சொல்லாதே!''

''வேணும்னு உங்களைச் சொல்லிட்டு அவர் பேரைச் சொல்றேன்!''

''பிரமாதமாப் பேசி நீ என்னைப் பேச விடாமல் செய்துடலாம். ஆனால் என்னுடைய 'ஹீரோ' சகலலோக நாயகன். உன்னுடைய 'ஹீரோ' — அந்த மாதிரிதானே நீ பேசறே! — உன்னுடைய 'ஹீரோ' எப்படிப்பட்டவன் தெரியுமோ? அவனிடத்திலேயே அவனுக்கு மதிப்புக் கிடையாது. தன்னை ஒரு உதவாக்கரைன்னு அவனே நினைக்க ஆரம்பிச்சிருக்கான் இப்போ...''

ரங்கராஜன் அவனுடைய சுருதியில் நின்று பேசாமல், சுருதி பேதம் செய்து கடைசியில் சுருதியை விட்டே விலகி, அபசுரமாகப் பேசுவது போல் விஜயாவின் செவிகளுக்கு ஒலித்தது. அடக்கம் வேண்டியதுதான். அதற்காக 'உதவாக்கரை' என்ற மலிவான வார்த்தையை அந்த அருமையான நேரத்தில் உச்சரிப்பானேன்?

கோவிலுக்கு எதிர்த் திசையில் உள்ள வீதியில் ஒரு சத்திரத்தின் வாசலில் போடப்பட்டிருந்த கல்யாணப் பந்தலுக்கு அருகில் கார் வந்து கொண்டிருந்தது. பேச்சை மாற்றுவதற்கு விஜயாவுக்குப் பளிச்சென்று ஒரு புது விஷயம் கிடைத்து விட்டது.

''இன்னிக்கு முகூர்த்த நாள்! அதனாலேதான் இந்தக் கூட்டம்..... வெறும் நாள் கடைசி வெள்ளிக் கிழமையாகி, கடைசியில் முகூர்த்த நாளாகவே மாறி விட்டது.'' விஜயா அவன் முகத்தைப் புன்னகையோடும் உதட்டை அமுக்கிக் கொண்டு, ஒரு விசேஷ அர்த்தத்துடனும் திரும்பிப் பார்த்தாள். அவனும் அப்போது விஜயாவின் ஆதார சுருதிக்குத் திரும்பி விட்டான். அதில் நின்று உல்லாசமான சஞ்சாரங்களைச் செய்யாமல், உருக்கமும், குழைவும், கனிவுமாக வார்த்தைகளைக் கொட்டினான்:

''விஜயா! நீ ராமன் பேரை உச்சரிச்சியே, அதனுடைய பலன் இது. அந்த மந்திரச் சொல்லிலே முகூர்த்த நாள் மட்டுமல்ல, இருதயுகமேகூடப் பிறந்து விடும்...''

விஜயா மீண்டும் ஒரு முறை அவனைத் திரும்பிப் பார்த்தாள். அவன் முகத்தில் பேதைமையும், பரவசமும் தென்பட்டன. தன்னோடு பேசிக்கொண்டிருப்பவன் ரங்கராஜன்தானா அல்லது ராமனா என்று திகைப்பவளைப் போலவும் அவள் அவனைப் பார்த்தாள்.

அப்புறம் அவர்களால் எதையுமே பேச முடியவில்லை. காரைக் கொண்டு போய் டூரிஸ்ட் பஸ் அருகில் நிறுத்தினாள் விஜயா. இருவரும் இறங்கினார்கள். அதைப் பூட்டிவிட்டு எதிரே இருந்த ஒரு கடைக்காரனிடம் அதைக் கொஞ்சம் பார்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்வதற்காக அருகில் சென்றாள். அவன் உடனே ''வாருங்க'' என்று சொல்லி விட்டு ஒரு கூடையில் தேங்காய், பழம், கற்பூரம் முதலிய வஸ்துக்களை எடுத்து வைக்கத் தொடங்கினான்.

''இருக்கட்டும். அப்புறம் நாங்க கோயிலுக்குள்ளே போறப்போ வந்து வாங்கிக்கிறோம். இப்போ இந்தக் காரைக் கொஞ்சம் பார்த்துக்கோங்க. மலைக்குப் போயிட்டு வந்துடுறோம்'' என்றாள் விஜயா.

''சரி, போயிட்டு வாங்க... கார் சும்மா இருக்கட்டும். நான் பார்த்துக்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல, குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

கிடுறேன்'' என்று கடைக்காரன் சொல்லிவிட்டு ரங்கராஜனையும் விஜயாவையும் மாறி மாறிப் பார்த்தான். மனத்தில் ஏதோ ஒரு சந்தேகமோ விகற்பமோ தோன்றி அவன் அப்படிப் பார்க்கவில்லை. இருவருடைய தோற்றங்களிலும் காணப்பட்ட ஓர் அசாதாரணமான வேற்றுமையைத்தான் அவன் கவனித்தான்.

ரங்கராஜன் இந்தத் திருப்பரங்குன்றம் பயணத்துக்காக விசேஷமாக உடுத்திக் கொண்டு வரவில்லை. ஒரு சாதாரண வேஷ்டி; ஒரு சாதாரண ஜிப்பா. இவ்வளவுதான் அவனுடைய உடை. முகத்தில் கூட ஒரு புது மெருகில்லை. பகலெல்லாம் ஆபீசில் வேலை செய்துவிட்டு, மாலையில் வீடு திரும்பும் ஒருவனைப் போலவே அவன் காட்சியளித்தான். விஜயாவோ டிஷ்யூ புடவை உடுத்தி, அதற்குச் சரியாகப் பொருந்தும் ஒரு டிஷ்யூ ஜாக்கெட்டும் போட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுதுதான் முகத்தை அலம்பிப் பவுடர் போட்டுக் கொண்ட மாதிரி ஒரு புது மலர்ச்சி. குதிரை வால் கொண்டை; குதி உயர்ந்த காலணிகள்; கையில் ஓர் ஆடம்பரப் பை. கழுத்தில் முத்து நெக்லஸும், காதில் முத்துத் தோடும் போட்டிருந்தாள். வேறு தங்க நகைகள் இல்லை. வலது கையில் கடிகாரம் கட்டியிருந்தாள். இப்படிப்பட்ட நாகரிகப் பெண்ணுக்கு இப்படிப்பட்ட கர்நாடக மாப்பிள்ளையா என்று வியப்பது போல் கடைக்காரன் பார்த்தான்.

கடையை விட்டு நகர்ந்ததும், ''மலைக்குப் போகிறோமா இப்போ? என் கிட்டே சொல்லலையே!'' என்றான் ரங்கராஜன்.

''நாம்ப இங்கே வந்தது எப்படி எதிர்பாராமல் நடந்த காரியமோ அப்படித்தான் மலைக்குப் போறதும். ....போகலாமே! நீங்க இந்த மலையிலே ஏறியிருக்கிறீர்களோ?'' என்று அவள் கேட்டாள்.

''இல்லை. ஆனால் ஆசை உண்டு.''

''நான் அஞ்சாறு தடவை இந்த மலையிலே ஏறியிருக்கிறேன். அதுக்குள்ளே எங்க அப்பா எங்களை அழைச்சுக்கிட்டு வந்திருக்கிறார். வரும்போதெல்லாம் கலா மலையிலே ஓடி ஓடி விளையாடுவாள்.''

''கலாவா? நம்ப கலாவா? நம்ப முடியலையே! பார்த்தால் பூனை மாதிரி அடங்கி ஒடுங்கி இருக்கிறாள்!...''

''பூனையும் மலையிலே ஓடும் தெரியுமோ?'' என்றாள் விஜயா.

விஜயா ஆடம்பரப் பையைத் திறந்து ஒரு கூலிங் கிளாஸை எடுத்துப் போட்டுக் கொண்டாள். உடனே அதைக் கழற்றி, ''இது இந்த நேரத்தில் அனாவசியம். ஏதோ யோசனையிலே கொண்டு வந்துவிட்டேன்....'' என்று சொல்லித் திரும்பவும் அதைப் பையிலேயே வைத்து விட்டு உள்ளேயிருந்து பால் சாக்லேட்டுகளை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

இருவரும் மலையடிவாரத்தை நோக்கிச் சென்றார்கள்.

விஜயா தன்னைக் கயிற்றால் கட்டித் தன் இஷ்டம் போல் எங்கெங்கோ இழுத்துக் கொண்டு போவது போலவே ரங்கராஜனுக்கு அப்போது தோன்றியது. ஆனால் அது கைகளை அறுக்கும் முரட்டுக் கயிறாக இல்லாமல் புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட ஒரு மாலையைப் போல் இருந்தது. 'அப்பாவும் சித்தப்பாவும் எனக்குப் பொன்விலங்கு போடுகிறார்கள். இவள் பூ விலங்கு போடுகிறாள்!' என்று சொல்லிக்கொண்டான் அவன். (தொடரும்)

## நங்கைநல்லூர் ஸ்ரீ விநாயகர் ஆலய மகாகும்பாபிஷேகம்

சென்னை மீனம்பாக்கத்தை அடுத்த நங்கைநல்லூர் காலனி ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயத்தில் ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு அவர்கள் அடிக்கல் நாட்டித் தொடங்கி வைத்த மகாமண்டபத் திருப்பணி பூர்த்தியாகி, ஸ்ரீ பக்த ஆஞ்சநேயர், ஸ்ரீ கோதண்டராமர், ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி, ஸ்ரீ நவக்கிரஹங்கள் ஆகிய தெய்வ சந்நிதிகள் அமைந்துள்ளன.

ஸ்ரீ பெரியவாளின் பரிபூரண அனுக்கிரஹத்துடன் 3-9-69 புதனன்று ஆலயத்தின் மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நிகழும். இதற்கெனத் தனித் திருப்பணிக்குழு ஒன்று ஸ்ரீமான் எம். வி. வேங்கடராமன் (அமால்கமேஷன்ஸ் லிமிடெட் டைரக்டர்) அவர்கள் தலைமையில் செயலாற்றி வருகிறது.

வைபவத்துக்குப் பெரும் தொகை செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருப்பதால் ஆஸ்திகப் பெருமக்கள் இயன்ற அளவு ஆதரவளித்து உதவ வேண்டுமென்று ஆலயத்தை நிர்வகித்து வரும் ஸ்ரீ கணேஷ் மண்டலியினர் கேட்டுக் கொள்ளுகின்றனர்.

[பணம், பண்டங்கள் சேர்ப்பிக்க முகவரி: எம். பி. ஸ்ரீநிவாசன், தலைவர், மகாகும்பாபிஷேகத் திருப்பணிக்குழு, ''பாரிஜாதம்'' 42, முதலாவது பெருஞ்சாலை, நங்கைநல்லூர் காலனி, சென்னை - 61]

# ஓய்வெடுங்கள்!

எபேப்* அடங்கிய

# அவேதன்®

## தலைவலியிலிருந்து துரித நிவாரணம் அளிக்கிறது

**—அது தீமையற்றதும் கூட!**

அவேதன் சாப்பிட்டு ஒருசில நிமிடங்களில் நிவாரணம் பெறுங்கள்! தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு, பல்வலி, முதுகு வலி மற்றும் இதர வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரித நிவாரணம் பெறுங்கள். அற்புத எபேப் அடங்கிய அவேதன் தீமையற்றதும் கூட!





SQUIBB®
ஸாராபாய் கெமிகல்ஸ்

* என்-அஸிடில்-பி-அமினோஃபினால்

● [illegible]

Shilpi SC 6A/69 Tam.

# அவனுள்ளும் அது

**உமா சந்திரன்**

சிறப்புச் சிறுகதை

சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வேர்க்க விறுவிறுக்க வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தார் பஞ்சு சாஸ்திரிகள். நல்ல ஆனி மாதத்து உச்சி வெய்யில். சாஸ்திரிகளின் உடம்பெல்லாம் உருகி ஓடிக் கொண்டிருந்தது. களைப்பு மிகுதியில் கை கால்கள் துவண்டு விழுந்து விடும் போலிருந்தன. பசி கண்ணை இருட்டிக் கொண்டு வந்தது. ஆனால் குப்புசாமித் தோட்டம் இப்போதைக்கு வராது போலிருக்கிறதே! நடக்க நடக்க வழி முடிவில்லாமல் நீண்டுகொண்டிருக்கிறதே!

அன்று மாம்பலத்தில் உள்ள ஒரு வீட்டில் குழந்தையின் ஆண்டு நிறைவு நடத்தி வைக்க வேண்டியிருந்தது. வைதிகக் காரியங்களெல்லாம் முடிந்ததும் எல்லோருடனும் உட்கார்ந்து சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ஆனால் சாஸ்திரிகள் எப்படிச் சாப்பிட்டு விட்டு வர முடியும்? நியமப்படி உமாமகேசுவர பூஜை செய்து திராட்சைப் பழமாவது நிவேதனம் செய்யாமல் அவர் பல்லில் தண்ணீர்கூடப் படும்படி விடுவதில்லையே. அன்று பார்த்துச் சைக்கிளும் காலை வாரி விட்டு விட்டது. பாதி வழி வந்து கொண்டிருந்த போது செயின் இரண்டாக அறுந்தது. சைக்கிளையும், தள்ளிக் கொண்டு நடப்பதைத் தவிர வேறு வழி!

சாதாரணமாக சாஸ்திரிகள் காலையில் எட்டு மணிக்குள்ளேயே பூஜையை முடித்துக் கொண்டு காபி மட்டும் சாப்பிட்டு விட்டுத்தான் வெளியே கிளம்புவது வழக்கம். மத்தியானச் சாப்பாடு வெளியே வைத்துக்கொள்வதாயிருந்தால் மனைவியிடம் சொல்லி விட்டுப் போய் விடுவார். அன்றும் அப்படித்தான் நினைத்திருந்தார். ஆண்டு நிறைவு வீட்டில் சாப்பிடச் சொல்வார்களென்று தெரியும். ஆனால் பூஜைக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்து கொண்டு உட்காரப் போகும் சமயத்தில் எதிர்பாராத விக்னம் நேர்ந்து விட்டது. அந்தச் சமயம் பார்த்து எதிர்க் குடிசை முனியாண்டி தன்னுடைய நாய்க் குட்டியை அவிழ்த்து விட்டிருந்தான். வாயில் ஓர் எலும்புத் துண்டுடன் உள்ளே வந்த நாய்க்குட்டி பூஜை செய்யுமிடத்தில் அதைப் போட்டுவிட்டு ஓடி விட்டது. அதன் பிறகு அந்த இடத்தைச் சுத்தி செய்யாமல் எப்படிப் பூஜைக்கு உட்கார முடியும்?

பிராரப்தம்! இந்தப் பட்டணத்து வாழ்க்கையில் எப்படிப்பட்ட அண்டை அயலாருடன் வாழ வேண்டியிருக்கிறது! ஆனால் பத்து ரூபாய்தான் வாடகை கொடுக்க முடியும் என்றிருந்தால் குப்புசாமித் தோட்டத்துக் குடிசையைத் தவிர வேறு நல்ல இடம் எப்படிக் கிடைக்கும்?



பட்டணத்துக்கு வந்து புரோகிதம் நடத்துவதென்ற முடிவுக்கு அவர் இருபது வருஷங்களுக்கு முன்பே வந்திருந்தால் ஒரு வேளை மயிலாப்பூரிலோ திருவல்லிக்கேணியிலோ குறைந்த வாடகையில் ஓரளவு சௌகரியம் நிறைந்த இடமாகப் பிடித்திருக்கலாம். ஆனால் வாழ்க்கையில் எவ்வளவோ அடிபட்ட பிறகுதானே அவருக்குப் பட்டணத்துக்கு வர வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. 'குளுகுளு' வென்று காவேரிக் கரையில் சொந்தக் கிராமத்

தில் சொந்த வீட்டில் எவ்வளவோ நிம்மதியாக இருந்தவர்தானே! திடீரென்று தெய்வம் சோதித்து விட்டது. அவர் வாழ்க்கைக்கு ஆதாரமாயிருந்த சொற்ப நிலம் ஒரு தரம் காவேரியில் வெள்ளம் வந்து வடிந்த பிறகு வெறும் மணல் மேடாக மாறியிருந்தது. அதற்கு மேல் ஊரிலிருந்து என்ன செய்வது?

பட்டணத்துக்கு வந்த புதிதில் ஐந்து பத்து அதிகம் போனாலும் போகிறதென்று தம்மை யொத்த வைதிகக் குடும்பங்கள் வதவதவென்று ஒண்டுக் குடித்தனம் இருந்து வந்த கௌரவமான பகுதியில் குடியிருந்து பார்த்தார். அப்பப்பா! போதும் போது மென்று ஆகிவிட்டது. பஞ்சு சாஸ்திரிகளின் மனைவி ருக்மிணி ஓர் அப்பாவி. வம்புப் பேச்சுக்கும் விஷமப் பேச்சுக்கும் ஈடுகொடுக்கும் சாமர்த்தியம் அவளிடம் கிடையாது. வைதிகக் குடும்பம் என்று பெயர் வைத்துக் கொண்டு இருபது வயதுப் பெண்ணைக் கலியாணம் செய்து கொடுக்காமல் வீட்டிலேயே வைத்துக் கொண்டிருந்தால் அக்கம் பக்கத்தாரின் வாய் சும்மா இருக்குமா?

'ஜாடை மாடையாக ஒத்தொருத்தரும் பேசற வார்த்தைகளைக் காதாலே கேட்க முடியலே. தங்கம் பாவம், கூனிக் குறுகு போறது. நம்மடவா நம்மடவான்னு மாஞ்சு போவானேன்? சவிரக்கம் எங்கே இருக்கு நம்மடவாளுக்கு? எங்கேயாவது குடிசை கிடைச்சாலும் போறும்! நம்மடவா பார்வையிலேயும் பேச்சிலேயும் விழாமல் இருந்தா அது போறும் எனக்கு' என்று ருக்மிணி அழமாட்டாக் குறையாகக் கூறிய பிறகுதான் பஞ்சு சாஸ்திரிகள் குப்புசாமித் தோட்டத்தில் குடிபுகத் தீர்மானித்தார்.

"வேறே எதைப் பத்தியும் எனக்கு லட்சியமில்லே ருக்கு. என் ஸ்வாமிக்கு நான் தவறுமே பூஜை நடத்தாகணும். அதுக்கு எந்த விக்னமும் நேரக் கூடாது."

நல்ல வேளை குப்புசாமித் தோட்டத்தில் அவருக்குக் கிடைத்த குடிசை ஒதுக்குப்புறமான தனிக் குடிசையாயிருந்ததோ, பிழைத்ததோ! அக்கம் பக்கத்தில் வேறு குடிசைகள் இருந்தால் தாங்கவே முடியாது. எதிர்ப்புறமாகப் பத்தடி எட்டினாற் போல் முனியாண்டியின் குடிசை இருந்தது. ஆனால் அது போதாதா என்ன? பஞ்சு சாஸ்திரிகளைக் கண்டாலே அவனுக்குக் கண்ணைக் கரித்ததே!

"என்ன ஐயரே! இந்த எடமெல்லாம் உனக்கு எப்படி ஒத்துக்கும்? நாங்க எதை யெதையோ ஆக்கிச் சாப்பிடுவோம், எதெதையோ வீட்டு வாசல்லே வீசியெறிவோம். அந்த வாடை பட்டாக்கூட நீ குளிச்சாகணுமே?" —இதுதான் முனியாண்டி முதல் முதலாக அவருடன் பேசிய பேச்சு. அவர் பழுத்த பழமாயிருப்பதைப் பற்றி அவனுக்கு என்ன கவலை? எல்லோருக்கும் கிடைக்கும் ஏகவசன மரியாதைதான் அவருக்கும்.

அன்று பஞ்சு சாஸ்திரிகள் பதில் ஏதும் சொல்லவில்லை. முனியாண்டி வேண்டுமென்றே அவர் வாயைக் கிளறுகிறானென்று அவருக்குத் தெரியாதா என்ன?

அவனைப் பற்றி அவர் ருக்மிணியிடம் கூறியபோது அவள் கலங்கவில்லை.

"அவன் கிடக்கிறான்: நம்ம குழந்தையைப் பத்தி ஜாடை மாடையாகப் பேசி நம்ம மனசைக் குதறியெறியறவா யாரும் இங்கே இல்லேயே, அது போறும் எனக்கு" என்று திருப்தியுடன் கூறிக் கொண்டாள்.

தங்கத்தின் கலியாணத்தைப் பற்றிக் கவலைப்பட்டுச் சாத்தியமில்லை என்று கவலைப் படுவதையே விட்டிருந்தார் பஞ்சு சாஸ்திரிகள். அவளுக்குத் தகுந்த இடத்தைச் சுவாமியாகத் தேடிக் கொடுப்பார் என்று உறுதியாக நம்பினார். தங்கத்துக்கு என்ன குறைவு? எட்டு வயதில் ஏற்பட்ட இளம் பிள்ளை வாதத்தினால் ஒரு கால் சிறிது ஊனமாய்ப் போய்விட்டது என்பதற்காக அவளிடமிருந்த மற்ற நிறைவுகளெல்லாம் மறைந்து விடுமா? ஆனால் அந்த ஊனத்தையே பெரிதுபடுத்திப் பேசத்தான் ஒவ்வொருவருக்கும் தோன்றியதே ஒழிய அவளுடைய சௌமியமான அழகோ, மற்ற குணங்களோ யார் கண்ணிலும் பட்டதாகவே தெரியவில்லையே! 'போனால் போகிறது' அதற்காகத் தங்கத்தை ஏதாவது பாழுங் கிணற்றில் தள்ள முடியுமா என்ன? பாட்டோடு பாடாகத் தங்கம் எப்படியோ ஹைஸ்கூல் படிப்பை முடித்து விட்டுத் தட்டெழுத்தும் சுருக்கெழுத்தும்



கற்றுக் கொடுக்கும் ஓர் இன்ஸ்டிட்யூட்டுக்குப் போய் வந்து கொண்டிருந்தான். ஆயிற்று. இன்னும் ஆறு மாதங்கள் கழித்து நடக்கப் போகும் பரீட்சையிலும் பாஸ் செய்து விட்டால் எங்காவது ஒரு நூறு ரூபாய் வேலை கிடைக்காமலா போய்விடும்? அவன் வரையில் மற்றவர் கையை எதிர் பாராமல் காலம் கழியுமல்லவா? தங்கம் அதைத்தான் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''அப்பா! என் மேலே இரக்கப்பட்டு யாரும் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டாம். அதைவிட நான் படிச்ச படிப்பைக் கொண்டு மாசம் நூறோ, நூத்தம்பதோ சம்பாதிக்க உனக்கும் அம்மாவுக்கும் ஒத்தாசையா இருக்க முடிஞ்சா அது போதும் எனக்கு.''

தங்கம் அப்படிச் சொல்லலாம். ஆனால் பெற்றவர்கள் மனசு கேட்குமா? தங்கம் வேலைக்குப் போக ஆரம்பித்தாலாவது அவளுக்கு விடிவு காலம் ஏற்படாதா என்று ஏங்கிக் கொண்டிருந்தார்கள்....

குப்புசாமித் தோட்டத்துக்கு வாயில் போல் அமைந்திருந்த ஓடுகால் பாலத்தருகே முனியாண்டி பீடி குடித்துக்கொண்டு நின்று கொண்டிருந்தான்.

''என்ன ஐயரே! சைக்கிளைத் தள்ளிக்கினு வறே. சரித்தான். செயின் அறுந்து போச்சா? என்னிக்கோ காயலான் கடைக்குப் போயிருக்க வேண்டிய சைக்கிள். இதை இன்னும் கழுத்திலே கட்டிக்கிட்டு அலையறே?''

அவனுடைய பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேசிக் கொண்டிருக்கப் பொறுமை ஏது சாஸ்திரிகளுக்கு? அவன் ஏன் அன்று வேலைக்குப் போகாமல் அங்கேயே சுற்றிக் கொண்டிருக்கிறான் என்று தெரிந்து கொள்ளவும் அவர் விரும்பவில்லை. வேகமாகச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு சென்று குடிசை வாசலில் நிறுத்தினார். இன்று உச்சி வேளை தாண்டி உமாமகேசுவர பூஜை செய்ய வேண்டியிருக்கிறதே என்ற தாபம் தான் மேலோங்கியிருந்தது அவர் மனத்தில்.

தங்கம் தவிப்புடன் அவரருகே விரைந்து வந்தாள். ''என்னப்பா இது! காயக் காய இப்படி வெயில்லே நடந்து வந்தால் உடம்பு எப்படித் தாங்கும்?'' என்று கேட்டுக் கொண்டே அவர் சைக்கிள் கைப் பிடியில் மாட்டியிருந்த பையைக் கையில் எடுத்துக் கொண்டு உள்ளே சென்று ஒரு நொடியில் ஒரு செம்பு ஜலத்துடன் திரும்பி வந்தாள்.

செம்பு ஜலத்தை அவளிடமிருந்து வாங்கிக் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டார் பஞ்சு சாஸ்திரிகள்.

சாதாரணமாகப் பஞ்சு சாஸ்திரிகள் உமாமகேசுவர பூஜை செய்வதற்குக் குறைந்தது ஒரு மணி நேரம் எடுத்துக் கொள்வார்.

ஆனால் அன்று அவ்வளவு பொழுது ஏறிப் போன பின்பு அப்படியெல்லாம் விஸ்தாரமாகப் பூஜை செய்வது பஞ்சு சாஸ்திரிகளுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஒவ்வொன்றையும் சுருக்கமாக முடித்துக் கொண்டு தூப தீபங்களை முறைப்படி காட்டிய பிறகு நைவேத்தியம் செய்து கற்பூர ஹாரத்திக்குத் தயாரானார்;

அந்தச் சமயம் பார்த்துத்தானா முனியாண்டி அவ்வளவு உரத்த ஒலியில் டிரான்ஸிஸ்டரைத் திருப்பி வைக்க வேண்டும்? மணியின் மங்கல ஒலியையும் பஞ்சு சாஸ்திரிகளின் வாயிலிருந்து கணீரென்று வெளிப்பட்ட கற்பூர ஹாரத்தி சுலோகத்தையும் அப்படியே அமுக்கி விடும்படி இருந்தது அந்த மட்டரகமான சினிமாப் பாட்டு. தங்கமும் தாயாரும் ஒருவரையொருவர் திகிலுடன் பார்த்துக் கொண்டனர். ஆனால் பஞ்சு சாஸ்திரிகள் சலனம் ஏதுமின்றித் தீபாராதனை செய்து முடித்துக் கற்பூரத் தட்டைக் கண்களில் ஒற்றிக் கொண்டு மற்றவர்களுக்கும் காட்டினார். எல்லோரும் ஸ்வாமிக்கு நமஸ்கரித்து எழுந்தனர்.

டிரான்ஸிஸ்டர் ஒலித்துக் கொண்டே இருந்தது. அவர்கள் சாப்பிட்டு எழுந்திருக்கும் வரையில் அது ஓயவே இல்லை.

கையலம்பிக் கொள்ளச் சாஸ்திரிகள் வெளியே வந்த போது முனியாண்டி தன்னுடைய குடிசை வாசலில் டிரான்ஸிஸ்டருடன் உட்கார்ந்திருந்தான்.

''என்ன ஐயரே! இன்னிக்கு ஊட்லே தான் சாப்பாடா? வெளியிலே எங்கேயும் சாப்பாடு கிடைக்கலேயா?'' என்றான் கிண்டலாக.

''இன்னிக்கென்ன, நீ வேலைக்குப் போகலேயா?'' என்று பேச்சை மாற்றும் முறையில் விசாரித்தார் சாஸ்திரிகள்.

''வேலைக்கு மட்டம் போட்டுட்டேன். உடம்பு முடியல்லே'' என்றான் முனியாண்டி.

''என்ன உடம்பு?''

''உழைக்கத் தெம்பு வேணுமே. உன்னைப் போல் ஓசியிலே சாப்பாடு கிடைச்சிடுமா எனக்கு. ரத்தத்தைச் சிந்தியாகணும். சும்மா இல்லே.''

''ஒத்தொருத்தருக்கும் ஒவ்வொரு விதத்திலே படியளக்கிறார் பகவான்.''

''ஆமாம்! பகவான்! பகவான்! அந்தப் பேரைச் சொல்லி ஊரை ஏமாத்திக்கிட்டுத் திரியறதுதானே உன் வேலே?''

பேச்சை வளர்த்த விருப்பமில்லாமல் சாஸ்திரிகள் உள்ளே போகத் திரும்பினார். அப்போது முனியாண்டியின் நாய்க் குட்டி நாற்கால் பாய்ச்சலில் ஓடிவந்து அவர் காலைச் சுற்றி விளையாட ஆரம்பித்தது.

''சீ, சீ!'' என்று விரட்டினார் சாஸ்திரிகள்.

''ஏன் ஐயரே, இது கொழந்தை மாதிரி. ஏன் இதை இப்படிக் கரிச்சுக் கொட்டறே?''

''காலம்பற இதுதான் என் ஸ்வாமிக்குப் பூஜை நடக்க விடாமே கெடுத்துட்டுப் போயிடுத்து. இத்தனை நாழிகை வரைக்கும் என் ஸ்வாமியைப் பட்டினி போடும்படி ஆயிடுத்து.''

முனியாண்டி வெடிச் சிரிப்புச் சிரித்தான். ''பகவான் எல்லாருக்கும் படியளக்கிறார்னு சொன்னே, இந்த நாய்க் குட்டி அந்தப் பகவானையே பட்டினி போட வச்சிடுச்சா?''

''எல்லாம் நம்பிக்கைதானேப்பா. என் தெய்வத்தைப் பட்டினி போட்டுட்டேன்னு நினைச்சா என் மனசு எப்படித் தவிக்கப் போறது தெரியுமா?'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றார் பஞ்சு சாஸ்திரிகள்;

# ஃபாஸ்ஃபோமின்



## சக்தியை அதிகரிக்கிறது.



## பசியைத் தூண்டுகிறது.

## வலிவைப் பெருக்குகிறது.



## நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

சுருங்கச் சொன்னால்—
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்




ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும், பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய, பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்குகள். கரம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS

Shilp SC 10A /67 Tam

முனியாண்டி ஏதோ மோட்டார்த் தொழிற்சாலையில் மெக்கானிக் வேலை பார்த்து வந்தான். வேலைக்குப் போகும் நேரம் தவிர மற்ற நேரங்களில் டிரான்ஸிஸ்டரும் கையுமாகத் தன் குடிசை வாயிலில் உட்கார்ந்து பீடியைப் புகைத்துக் கொண்டிருப்பான். டிரான்ஸிஸ்டர் அலறிக் கொண்டிருந்தால்தான் அவனுக்குப் பொழுது உபயோகமாகக் கழிந்தது போல் தோன்றும்.

''கொஞ்ச நேரத்துக்காவது அதை மூடித் தொலையேண்டா'' என்று கூச்சல் போடுவாள் அவன் தாயார்.

அந்தக் கூச்சலுக்கு முனியாண்டி அசைந்து கொடுத்தால்தானே.

''மூடி வச்சிருந்தா நம்மகிட்டே டிரான்ஸிஸ்டர் இருக்கிறது நாலு பேருக்கு எப்படித் தெரியும்? நானூறு ரூபா குடுத்து வாங்கினது சும்மாவா ?''

அவன் தாயாருக்கும் அதைப் பற்றிப் பெருமைதான். மகன் ஒழுங்காக வேலைக்குப் போய்க் கொண்டு கிடைத்த சம்பளத்தில் சிறுகச் சிறுக மிச்சம் பிடித்து 'அதை வாங்கியிருக்கிறானே' என்று நினைத்துப் பூரித்துப் போவாள்.

எப்போதாவது அவள் ருக்மிணியைச் சந்திக்க நேர்ந்தால் தன் மகனைப்பற்றிய பிரதாபத்தைக் கொட்டியளக்கத் தவறுவதில்லை.

''எங்க முனியாண்டியைப் போல் உழைப்பாளி கிடையாதுன்னு அவன் கம்பெனியிலே அவனுக்கு ரொம்ப நல்ல பேரு. நீங்களே பார்த்துக்கிட்டிருங்க. கூடிய சீக்கிரம் ரொம்ப முன்னுக்கு வந்திடுவான். இந்தப் புது வருஷத்திலேயிருந்தே அவனுக்கு அம்பது ரூபா சம்பள உயர்வு கிடைக்கப் போகுது.''

'அவன் எப்படியாவது நன்றாயிருக்கட்டும். எங்கள் வழிக்கு வராமலிருந்தால் அதுவே போதும்' என்று நினைத்துக் கொள்வாள் ருக்மிணி.

முனியாண்டியைப் பற்றிப் பஞ்ச சாஸ்திரிகளுக்கு மட்டும் அல்ல, ருக்மிணிக்கும் தங்கத்துக்கும்கூட உள்ளூறப் பயம்தான். அவர்கள் அங்கு வந்து குடியிருப்பதை அவன் சற்றும் விரும்பவில்லை என்பதை அவனுடைய ஒவ்வொரு நடவடிக்கையிலிருந்தும் நன்றாகப் புரிந்து கொள்ள முடிந்ததே.

அவனுடைய தாயாருக்கே பொறுக்காமல் ஒரு நாள் அவனைக் கேட்டு விட்டாள். ''ஏண்டா அவங்களைக் கண்ணிலே காண விடாமே கரிச்சுக் கொட்டறே ? அவங்க உனக்கு என்ன கெடுதல் செய்தாங்க?''

''நம்ம வழி வேறே. இவங்க வழி வேறே. நாம இருக்கிற எடத்திலே இவங்களும் வந்து இருந்துக்கினு ஏன் தொல்லை கொடுக்கிறாங்க?'' என்று முணுமுணுத்தான் முனியாண்டி.

''எல்லாவோ நொந்து போய்த்தானே இங்கே வந்திருக்காங்க. நாம மேலும் அவங்களை நோகப் பண்ணிறது எப்படி ?''

''ஆமாம், இவங்க மனசு நொந்திடுமேன்னு அஞ்சி அஞ்சி நடக்கணுமா ?



''காரை விற்றுவிட்டு......''

''புதுக் கார் வாங்கப் போறீங்களா ?''

''ஸ்கூல் புக்ஸ், காலேஜ் அட்மிஷன் குழந்தைகளுக்கு யூனிபாரம் இவைகளுக்காக வாங்கின கடன் அடைக்கக் காரை விற்கப்போறேன் !''

நம்ம எடத்திலே நம்ம இஷ்டப்படி இருக்கக் கூடவா நமக்கு உரிமை கிடையாது ?'' என்று சீறுவான் முனியாண்டி.

கொஞ்ச நாட்களாக வீட்டில் விழும் குப்பைகளை வீட்டெதிரேயே எறியாமல் ஒதுக்குப்புறமாயிருந்த ஒரு குப்பைத் தொட்டியில் கொண்டு போய்ப் போட்டு விட்டு வந்து கொண்டிருந்தாள் அவன் தாயார். ஒரு நாள் அதைப் பார்த்துவிட்ட முனியாண்டி அதைக் குறித்துத் தாயாரைக் கோபித்துக் கொண்டான்.

பெரும்பாலும் முனியாண்டி காலையில் வேலைக்குக் கிளம்புவதும் சாஸ்திரிகள் சைக்கிளை எடுத்துக் கொண்டு வெளியே புறப்படுவதும் சரியாயிருக்கும்.

''என்ன ஐயரே! எனக்குத்தான் கணக்கா எட்டரை மணிக்குத் தொழிற்சாலையிலே ஆஜராகணும். உனக்கென்ன வந்தது ? கொஞ்ச நேரம் பொறுத்துப் புறப்பட்டால் குடியா முழுகிப் போயிடும்? தினம் தவறாமே எனக்குப் போட்டியா கிளம்பிடறியே ?''

''என்னப்பா செய்யறது ? இப்பப் புறப்பட்டாத்தானே நாலு எடத்துக்கும் போறதுக்குச் சரியாயிருக்கும்!''

''பூசை பூசைன்னு மாஞ்சு போறியே. அந்தப் பூசையை இன்னும் கொஞ்ச நேரத்துக்கு இழுக்கறதுதானே ?''

''பூஜையிலேயும் குறை வைக்கக் கூடாது. புரோகிதத்திலேயும் குறை வைக்கக்கூடாது. குல தெய்வத்தையும் ஆராதிக்கணும். குடும்பத்தையும் ஒழுங்கா நடத்தணும்'' என்பார் சாஸ்திரிகள்.

அதற்கு மேல் அவர் பேச்சைக் கேட்க விரும்பாதவன் போல் டிரான்ஸிஸ்டரைப்

பெரிதாக ஒலிக்கச் செய்து கொண்டு வேகமாகப் பாலத்தைக் கடந்து சென்று விடுவான் முனியாண்டி.

தினமும் சாயங்காலம் தங்கத்துக்குச் சோதனை. தட்டெழுத்தும் சுருக்கெழுத்தும் கற்றுக் கொடுக்கும் இன்ஸ்டிட்யூட்டிலிருந்து கிட்டத்தட்ட விளக்கு வைக்கும் நேரத்துக்குத்தான் திரும்பி வருவாள் அவள். அந்தச் சமயம் முனியாண்டி தன் தோழர்கள் சிலருடன் ஓடுகால் பாலத்தின் ஓட்டுச் சுவரில் உட்கார்ந்து பீடி குடித்துக் கொண்டிருப்பான். அந்த இடத்தைத் தாண்டிச் செல்வதற்குள் தங்கம் குன்றிக் குறுகிப் போவாள். வலது காலைக் கெந்திக் கெந்தி அவள் நடந்து செல்வதை முனியாண்டியும் அவன் சகாக்களும் பரிகசித்துக் கேலி செய்வது போல் அவளுக்குத் தோன்றும். அவர்கள் பக்கம் திரும்பிப் பார்ப்பதற்கும் அஞ்சியவளாகத் தலையைக் கவிழ்த்துக் கொண்டு தரையைப் பார்த்தவாறு எப்படியோ அந்தப் பாலத்தைக் கடந்து சென்ற பிறகுதான் அவளுக்கு மூச்சே வரும்.

ஆனால் அவள் என்றாவது துணிச்சலுடன் அவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்திருந்தால் தன் கண்களையே நம்பாமல் திகைத்து நின்றிருப்பாள். முனியாண்டியும் சகாக்களும் தங்கள் கையிலிருந்த பீடியைக்கூட மறைத்து வைத்துக் கொண்டு வேறு எங்கோ பார்த்தவாறு முகத்தில் சிறிதும் சலனமில்லாமல் மௌனமாக உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவளுடைய வியப்புக்கு எல்லையே இருந்திருக்காது.

உண்மையில் முனியாண்டிதான் தன் சகாக்களை அப்படி எச்சரித்து வைத்திருந்தான். தங்கம் தூரத்தில் வருவதைப் பார்த்ததுமே எல்லோரும் அமரிக்கையாக வேறு பக்கம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்து விடுவார்கள். தங்கத்தைப் பற்றி எவ்விதக் கேலிப் பேச்சும் இதுவரையில் அவர்கள் வாயிலிருந்து வந்ததில்லை.

''அந்தப் பொண்ணு என் தங்கச்சி மாதிரி. யாராவது அதைப் பத்தித் தப்பாப் பேசினீங்க, தொலைச்சிடுவேன் தொலைச்சி.''

தங்கத்திடம் முனியாண்டிக்கு இருந்த அனுதாபம் சில சமயம் வேறு விதமாகவும் வெளிப்படும்.

''சாமி, பூசைன்னு உயிரை விடுறாரே, அந்த ஐயரு! அந்தச் சாமிக்குக் கொஞ்சமாவது இரக்கம் இருந்தால் தங்கச் சிலை மாதிரி அந்தப் பெண்ணுக்கு இப்படி ஒரு குறையை ஏற்படுத்தியிருக்குமா?'' என்று தாயாரிடம் ஆற்றாமைப்படுவான்.

''அவங்கவங்க தலையெழுத்துக்குச் சாமி என்ன செய்யும்?'' என்று கூறுவாள் அவள்.

'தலையெழுத்தை எழுதறதே சாமிதானே? ஒழுங்கான சாமியாயிருந்தா தலையெழுத்தை ஏன் இப்படித் தாறுமாறு எழுதித் தொலைக்கணும்?''

அன்று சிவராத்திரி. அன்று முழுவதும் சாஸ்திரிகள் தண்ணீர்கூட அருந்தாமல் நியம நிஷ்டையுடன் இருந்தார். மாலையில் மீண்டுமொரு முறை குளித்து மடியுடுத்திக் கொண்டு பிரதோஷ காலத்தில் பூஜையை ஆரம்பித்து நடுநிசி வரை சளைக்காமல் செய்து கொண்டிருந்தார்: முனியாண்டியும் சளைக்கவில்லை. ஒரு நிமிஷம்கூட ஓயாமல் டிரான்ஸிஸ்டரை அலற விட்டுக் கொண்டிருந்தான்.

பங்கு சாஸ்திரிகளுக்கே தாங்கவில்லை. கடைசி பூஜை முடிந்து கற்பூர ஹாரத்தி ஆனதும் ஓர் உத்ரணி பில்வ தீர்த்தத்தை உட்கொண்ட பிறகு சிரித்துக் கொண்டே தம் மனைவியிடம் கூறினார்: ''அவன் நாஸ்திகனா இருந்தால் இருக்கட்டும். ஆனா பூஜையைக் கெடுக்கிறதா நினைச்சுண்டு தன் காதை இப்படிக் கெடுத்துக்கறானே. இப்படியே போனா இவன் காது ரெண்டும் டமாரச் செவிடாயிடப் போறது.''

''அவனுக்குத் தெரிஞ்ச லட்சணம் அவ்வளவுதான். விட்டுத் தொலையுங்கோ.....'' என்றாள் ருக்மிணி.

இரவு முழுவதும் ஆகாரமில்லாமல் கண் விழித்து அதிகாலையில் ஸ்நானம் செய்து அன்றைய பூஜையையும் முடித்துக்கொண்ட பிறகு பாரணை செய்தவுடன் உடம்பை ஒரேயடியாக அசத்தி விட்டது சாஸ்திரிகளுக்கு. அன்று வெளியே எங்கும் போகாமல் அப்படியே படுத்து விட்டார். அடித்துப் போட்டாற் போல் மாலை நான்கு மணி வரை அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்.

கண்ணை விழித்ததும் அவருக்கே ஆச்சரியமாயிருந்தது. ''இவ்வளவு நாழிகை தூங்கிப் போயிட்டேனா? முனியாண்டியோட டிரான்ஸிஸ்டர் சத்தம்கூட எப்படி என்னை எழுப்பாமல் இருந்தது?'' என்றார்.

''முனியாண்டி வீட்டிலே இருந்தாத்தானே? இன்னிக்கு அவன் வேலைக்குப் போகலையாம். ராத்திரி முழுக்க டிரான்ஸிஸ்டரை அலற விட்டு அவனுக்கே அலுத்துப் போயிடுத்து போலேயிருக்கு. அதை ஒரு மூலையிலே வீசியெறிஞ்சிட்டு ஏதோ சினிமாப் பார்க்கப் போயிட்டானும்'' என்றாள் ருக்மிணி.

ஐந்து மணிக்கு மேல் சாஸ்திரிகள் வெளியே கிளம்பினார். தங்கம் இன்ஸ்டிட்யூட்டுக்குப் போயிருந்தாள். ''நானும் கடைக்குப் போய்க் கொஞ்சம் சாமான்கள் வாங்கிண்டு வரவேண்டியிருக்கு'' என்றாள் ருக்மிணி.

மயிலாப்பூர் குளத்தருகே தம்முடைய சக புரோகிதர்களைக் கண்டு சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுச் சாஸ்திரிகள் வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த போது தான் நடுவழியில் அந்தச் செய்தி அவர் காதில் விழுந்தது. குப்புசாமித் தோட்டத்தில் குடிசைகள் பற்றிக் கொண்டு எரிகின்றன என்று பரபரப்புடன் பேசிக் கொண்டே ஜனங்கள் அந்தத் திசையில் ஓடுவதைக் கண்டு அவர் திடுக்கிட்டார். தம்முடைய வீட்டில் ருக்மிணியும் தங்கமும்கூட இருக்கிறார்களோ இல்லையோ தெரியவில்லையே? இருந்தாலும்தான் அவர்களால் என்ன செய்ய முடியும்?

வேகமாகச் சைக்கிளை விட்டுக் கொண்டு ஓடுகால் பாலத்தைக் கடந்து அவர் சென்ற போது முனியாண்டியும் அதே திசையில் ஓடிக் கொண்டிருப்பதைக் கண்டார். மற்றக் குடிசைகளில் பற்றியிருந்த தீ காற்றுப் போக்கில் இருவருடைய குடிசைகளுக்குமே

தாவிவிருந்தது. அப்போதுதான் வந்திருந்த ருக்மிணியும் தங்கமும் செய்வதறியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு நின்று கொண்டிருந்தனர். அவர்கள் வருவதற்கு முன்பே முனியாண்டியின் தாயார் கூடுமான வரை அவர்கள் வீட்டுச் சாமான்களை வெளியே எடுத்துப் போட்டு விட்டுத் தன் குடிசையிலிருந்தும் சாமான்களை எடுத்துக் கொண்டு ஓடி ஓடி வந்து வெளியே பத்திரமான இடத்தில் சேர்த்துக் கொண்டிருந்தாள்.

சைக்கிளிலிருந்து கீழே குதித்த சாஸ்திரிகள் குடிசை பற்றியெரிவதைப் பார்த்துத் திகைத்து நின்றார். மறுகணம், ''ருக்கு, பூஜைப் பெட்டி எங்கே? நம்ம ஸ்வாமியெல்லாம் என்ன ஆச்சு?'' என்று கத்தினார்.

''ஐயையோ! பூஜைப் பெட்டி உள்ளேயே தங்கிப் போயிடுத்தே!'' என்று பதறினாள் ருக்மிணி.

அதே சமயம் முனியாண்டியின் தாயார் கூச்சலிடுவது கேட்டது. ''டேய்! முனியாண்டி, உன்னோட ரேடியோப் பெட்டி உள்ளே மாட்டிக்கிடுச்சுடா. உள்ளே போக முடியாமே அனல் அடிக்குதேடா.''

''என் ஸ்வாமி இல்லேன்னு நான் உயிரை விட்டுடுவேன், பூஜைப் பெட்டியை எப்படியாவது எடுத்து வந்தாகணும்'' என்று துடித்தவாறு முன்னே பாய்ந்தார் பஞ்சு சாஸ்திரிகள்.

''அப்படியே நில்லு ஐயரே!'' — இடி முழக்கம் போன்ற குரலுடன் முனியாண்டியின் வலிய கரம் அவரைப் பின்னுக்கு இழுத்துத் தள்ளியது. எரியும் குடிசைக்குள் அவனே பாய்ந்து விட்டான். சில விநாடிகளுக்கு அந்தப் புகை மூட்டத்தில் எதுவுமே தெரியவில்லை. ஒரு நிமிஷம் ஒரு யுகம் போல் தோன்றியது. அதன் முடிவில் முனியாண்டி கையில் பூஜைப் பெட்டியுடன் அந்தப் புகை மண்டலத்திலிருந்து வெளிப்பட்டுத் தள்ளாடியவாறே சாஸ்திரிகளருகே வந்து சேர்ந்தான்.

''இந்தா ஐயரே, உன்னோட சாமி.''

இரு கைகளாலும் அந்தப் பூஜைப் பெட்டியை மகிழ்ச்சியுடன் வாங்கி மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டார் சாஸ்திரிகள்.

''முனியாண்டி! உன்னோட ரேடியோப் பெட்டி நெருப்புக்கு இரையாயிடுச்சுடா!'' என்று கத்தினாள் அவன் தாயார்.

மூச்சு இரைக்க மேலெல்லாம் தீப் புண்களுடன் நின்ற முனியாண்டியைப் பஞ்சு சாஸ்திரிகள் கண்களில் நீர் மல்க நன்றியுடன் பார்த்தார்.

''டிரான்ஸிஸ்டர் போனாப் போகட்டும்னு என் ஸ்வாமியைக் காப்பாத்திக் குடுத்தியே.....! உன்னை... உன்னை...!''

''கிடக்கு ஐயரே.. டிரான்ஸிஸ்டர் ஒண்ணு போயிட்டா நான் உயிரை விட்டுட மாட்டேன். ஆனா உன் சாமி போச்சுன்னு நீ உன் உயிரையே விட்டுடுவியே!'' என்று அலட்சியமாகக் கூறிய முனியாண்டி தன் கருகிய குடிசையை நோக்கி நடந்தான்.

## 4. வ. உ. சி.யும் காந்திஜியும்

கல்கத்தாவில் 1919ல் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்தில் மகாத்மாவின் ஒத்துழையாமைத் தீர்மானம் ஆலோசனைக்கு வந்தது. வ. உ. சிதம்பரம் பிள்ளைக்குத் திலகரிடம் அபார பக்தி. திலகர் உயிருடன் இருந்தால் இந்தத் தீர்மானத்துக்கு ஆதரவளிக்கமாட்டார் என்று இத்தீர்மானத்தை எதிர்க்க வ. உ. சி. மிகப் பாடுபட்டார். ஆனால் அம்முயற்சி பலிக்கவில்லை. அக்காங்கிரஸில் காந்திஜியையும் நேரில் சந்தித்துப் பேச வாய்ப்புக் கிடைக்கவில்லை.

1920ல் வ. உ. சி. சென்னையில் பெரம்பூரில் வசித்தார். இக்காலத்தில்தான் அவர் மளிகை வியாபாரம் நடத்த வேண்டி வந்தது. வழக்காடியதொரு காலம்; வாணிபம் நடத்தியது ஒரு காலம். வல்லரசை எதிர்த்து நின்ற வ. உ. சி.யை வறுமை வாட்டியது.

இச்சமயத்தில்தான் காந்திஜி பெரம்பூரில் ஒரு தொழிலாளர் கூட்டத்தில் பேச வந்தார். எம். ஸி. ராஜாவும் அவர் சகாக்கள் சிலரும் காந்திஜியைப் பேச விடாமல் இடைமறித்துக் கேள்விகள் கேட்டனர். கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது. இக்குழப்பம் வ. உ. சி.யின் கோபத்தைக் கிளறிவிட்டது. ஒரு தடியை எடுத்துக் கொண்டு கூட்டத்தில் பிரவேசிக்க முயன்ற வ. உ.சி.யை காந்திஜி தடுத்து நிறுத்தினார். கூட்டத்தில் இதைத் தொடர்ந்து அமைதி நிலவியது. காந்திஜி பேசி முடித்தபின் திரு வி. க. (கலியாணசுந்தர முதலியார்) வ.உ.சி.யை 'எங்கள் கப்பல் ஓட்டிய தமிழர்' என்று அறிமுகப்படுத்தினார். திலகரின் அத்தியந்த சீடர் என்பதை அறிந்து காந்திஜி வ. உ. சி.யை அப்படியே கட்டிக் கொண்டார். 'தடியெடுத்துத் தண்டோபாயம்' (நக்கோ) கூடாது தெரியுமா?' என்றார் காந்திஜி. அன்றே காந்திஜியின் அஹிம்ஸை வழியில் வ.உ.சி. சொக்கிப் போனார்.



முதல் சந்திப்பு

மனச்சாட்சி: நல்லதைச் சொல்லுகிற ஆனால் பல வீனமான உட்குரல்!

மகாநாடு: தனித் தனியாக ஏதும் உருப்படியாகச் செய்ய இயலாதவர்கள் பலர் கூடி, தங்களால் எதுவும் செய்ய இயலாது என்பதை இறுதியாக உறுதி செய்யும் இடம்!

ச. ஸ்ரீதரன்



## பொய்யர் சங்கம்!

அமெரிக்காவில் 'பொய் பேசுபவர்கள் சங்கம்' ஒன்று இருக்கிறது. இதில் உறுப்பினராகப் பத்து சென்டு பணமும் ஒரு பொய்யும் எழுதி அனுப்ப வேண்டும். மாதிரிக்கு ஒன்று:

"காட்டில் என் எதிரில் இரண்டு கரடிகள் வந்தன. துப்பாக்கியில் ஒரு குண்டுதான் இருந்தது. என்ன செய்வது? என் கத்தியைத் துப்பாக்கிக்கு நேரே பிடித்துக் கொண்டு அதைக் குறி பார்த்துச் சுட்டேன். கத்தியில் பட்டதும் குண்டு இரண்டாகப் பிளந்து பாய்ந்தது. ஒரு பாதி ஒரு கரடியையும் மறு பாதி இன்னொரு கரடியையும் கொன்று விட்டது."

- பாபு.

உலகில் ஆண்டு ஒன்றுக்கு சுமார் ஒரு கோடி டன் எஃகு உபயோகப்படுத்தப்படுகிறது. ஏதோ தொழிற்சாலை கட்டுவதற்கு அல்ல. பெண்களின் தலையில் குத்திக் கொள்ளும் ஊசி, ஸ்லைட் போன்றவைகளுக்குத்தான்! ."என்பூ"

ஆதாரம்: - 'தி உமன்'



பாஸ்டன் நகரில் ஒரு பஸ் ஸ்டாப்பில் பஸ் நின்றது. கையில் குழந்தையுடன் ஒரு பெண் ஏறினாள். மேலே தொங்கிய வாரைப் பிடித்துக் கொண்டே அவள் நின்றாள். பஸ் நகர ஆரம்பித்தது. உட்கார்ந்திருந்த ஆண்களில் ஒருவராவது எழுந்து அந்தப் பெண்ணுக்கு இடம் கொடுக்க முன் வரவில்லை. பின்னால் திரும்பி இதைக் கவனித்த டிரைவர் சட்டென்று வண்டியை ஓரமாக நிறுத்தி விட்டுத் தம் இடத்தை விட்டெழுந்து அந்தப் பெண்ணிடம் வந்தார். தம்முடைய டிரைவர் ஸ்தானத்தைக் காண்பித்து, "நீங்கள் அங்கே போய் உட்காருங்கள்; நான் நிற்கிறேன்" என்றார். அவ்வளவுதான்; மறு நிமிடம் அந்தப் பெண்ணுக்கு இடம் கொடுக்கப் போட்டி ஏற்பட்டது.

ஆதாரம்: 'வோர்ல்ட் டைஜஸ்ட்'
தகவல்: 'என்பூ'

## எட்டாத உயரத்தில்...

டென்சிங்குக்குச் சவால் விட்டுக் கொண்டு எவரெஸ்டில் ஏறுவதற்குக் கிளம்பி விடாதீர்கள்! சுமார் ஐயாயிரம் ரூபாய் பணம் கட்டி லைசென்ஸ் வாங்க வேண்டும்—நேபாள சர்க்காரிடம்!

ஆதாரம்: "பேஜண்ட்"
தகவல்: "பாபு"



## பைசா கோபுரம் விழும்போது....

சாய்வாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கட்டப்பட்டதல்ல பைசா கோபுரம். முதலில் திட்டமிட்டபடி கட்டி முடிக்கப் பெறாமல் எட்டு அடுக்குகளுடன் நிறுத்தப்பட்டு விட்டது. பாதி கட்டும் பொழுதே சாய்வது போல் தோன்றியதால் திட்டமிட்டபடி பன்னிரண்டு அடுக்குகள் கட்ட முடியவில்லை; மேற்கூரையும் கட்டாமல் அப்படியே விட்டு விட்டனர்! இக்கோபுரம் நாளுக்கு நாள் சிறிது சிறிதாகச் சரிந்து கொண்டே வருகிறது. சாய்கிற விகிதத்தைக் கொண்டு பார்க்கும்போது 1974க்கு முன் தரையில் விழுந்து விடும் என்று பொறி இயலாளர் கணக்கிடுகின்றனர். அப்படி விழும்போது அக்காட்சியைப் படமெடுக்கச் சுமார் நூறு காமிராக்கள் இப்போது முதலே தயாராயிருக்கின்றன. தகவல்: ச. ஸ்ரீதரன்

ஆதாரம்: மாஸ்கோ நியூஸ்

"இதோ, பார்! பசு புலியாகவே மாறினாலும், புல்லும் பூவரசந் தழையும் தாம்பிரவருணி ஜலமும் சாப்பிட்டுவிட்டுக் காலம் தள்ளுமா? அல்லது தினமும் இருபது கிலோ இறைச்சியை விழுங்கும் குணத்தைப் பெற்றுவிடுமா? அப்படித் திடீரென்று மாறினால் நம்மால் அதைச் சமாளிக்க முடியுமா என்றுதான் யோசிக்கிறேன்!" □





மீனாட்சி கிருஷ்ணா

கோடை வெய்யிலின் உக்கிரம் எந்த ஆண்டிலும் இருந்தது போலவே, அந்த ஆண்டிலும் அதிகமாகவேதான் இருந்தது.

''உஸ்....ஸ்...அப்பாடா. என்ன வெய்யில்?... என்ன வேர்வை?'' என்று குறைப்பட்டுக் கொண்டே, தலையில் போட்டிருந்த துண்டால் முகத்தைத் துடைத்துக்கொண்டே திண்ணையில் அமர்ந்தார் — அக்கரையிலிருந்து காலில் செருப்புக்கூட இல்லாமல் நடந்து வந்த சீமா. அதே நிலையில் அரை மணி முன்னதாகவே நத்தத்திலிருந்து வந்து, சிரமபரிகாரம் செய்து முடித்துக் கொண்டு விட்டார் ரங்கசாமி. இன்னும் பழைய கிராமம் நாணுவும் வாசுவும்தான் வரவேண்டியது பாக்கி.

இதென்ன பெரிய பீடிகையாக இருக்கிறதே. இவர்களெல்லாம் என்ன பெரிய பிரச்னையைத் தீர்க்க நாலு திசைகளிலிருந்தும் வருகிறார்கள் என்று நீங்கள் கேட்கும் முன்பே பாண்டிக் கிட்டு, ''உம், ரங்கசாமி! நீதான் சீட்டைக் கலைச்சுப் போடேன்!'' என்று ஆணையிட்டு, இது மும்முரமான 'பிரிட்ஜ்' கச்சேரி என்று அறிவித்தது உங்கள் காதில் விழுந்திருக்குமே!

'ஜமா' சேர்ந்திருந்தாலும் தேவையுள்ள அளவு 'கோரம்' இல்லே. வலது தோளில் துண்டைப் போட்டுக்கொண்டு எதிர்ச் சரகில் அழிக் கம்பிக்குத் துணையாக நின்ற வெங்கிட்டாவிடம், ''என்டா, வெங்கிட்டா! இன்னிக்கு ஒரு கை ''ஷார்ட்டு!'' நம்ம 'லையன் டிஸ்ட்'டைத் தாஜா பண்ணி அழைச்சிண்டு வாயேன்!'' என்று குரல் கொடுத்தார் ரங்கசாமி.

''ஆமாம், நீங்க எப்போ கூப்பிடப் போறேள், வந்துடலாம்னுதான் காத்திண்டிருக்கார் அவர்! உங்களுக்குத்தான் வேறே வேலை இல்லே, சீட்டுக் கட்டைக் கட்டிண்டு அழறேள்!'' — வெங்கிட்டா சற்றுச் சூடாகவே பதிலிறுத்தான்.

''அப்படீன்னு அவர் டெஸ்ட் டியூபையும் விருதா மாட்டையும் கட்டிண்டு அழறாருக்கும்!'' — ரங்கசாமி கேட்டார். ஏனையோர் நகைத்தனர்.

''நீங்க கேலியிலேயே பொழுதைப் போக்குங்கோ! அவர் இப்போன்னு ஒரு நாள் பிரமாத 'டிஸ்கவரி' பண்ணப் போறார்! நோபல் பிரைஸ், பத்ம விபூஷண் அப்படி இப்படின்னு பட்டமெல்லாம் கிடைக்கிறப்போ விழுந்து நமஸ்காரம் பண்ணப் போறேள். நானும் பார்க்கத்தான் போறேன்!''

''அப்படி என்னடா இன்னும் பிரமாத 'டிஸ்கவரி' பாக்கி இருக்கு? சிருஷ்டி தத்துவத்தின் உள்ள பாரம்பரிய ரகசியமெல்லாம் கூட ஹர்கோவிந்த் கொரானா கண்டுபிடிக்கச்

சொல்லிட்டானே! உங்க 'குக்குட சாஸ்திரி' என்னத்தை உண்டாக்கிடப் போறார்?''—சீட்டைக் கலந்துப் போட்டுக் கொண்டே வெங்கிட்டாவின் வாயைக் கிண்டினார் ரங்கசாமி.

டாக்டர் நாராயணன் அரவங்குளத்துக்கு மிருக வைத்தியராக வந்து சேர்ந்து சுமார் இரண்டு ஆண்டுகளாகி விட்டன. இக் குறுகிய காலத்தில் முற்போக்கான எண்ணங்கள் கிராம மக்களிடையே அதிகம் பரவாததால், எண்ணிக்கை அளவில் அதிகமாக விஞ்ஞான ரீதியான சேவை செய்ய முடியாவிட்டாலும் உபயோகமுள்ள துண்டுப் படங்கள், கால் நடை அபிவிருத்தித் திட்டங்கள், கோழிப் பண்ணை என்று என்னென்னவோ செய்து வந்தார். ஆனாலும் தமக்குக் கிடைத்த மிகுதியான அவகாசத்தை இடையறாத படிப்பிலும், புதிய சோதனைகளிலுமாகச் செலவழித்தார். காரணமின்றி, பிறரின் அன்றாட அலுவல்களில் தலையிடுவது அவருக்குப் பிடிக்காத விஷயம். குடும்பமோ, குடித்தனமோ இல்லாது, தமது மருத்துவ மனையே கதியாகக் கிடந்த அவரை அரவங்குளத்துக்காரர்கள், ''ஸயன்டிஸ்ட்'', ''குக்குட சாஸ்திரி'', ''நாய்க்குட்டி வைத்தியர்'' என்றெல்லாம் நாமகரணம் செய்து அழைத்து வந்தனர்.

''ஸார்... உள்ளே வரலாமா?'' என்ற குரல் கேட்டு மைக்ரோஸ்கோப்பிலிருந்து தலையைத் திருப்பினார் டாக்டர் நாராயணன்.

''யாரு, வெங்கிட்டாவா? வா, வா! என்ன சமாசாரம்? 'பிரிட்ஜ் ஸர்க்கிள்'லே இன்னிக்கு என்ன அடிபடறது?''

''அதை விட்டுத் தள்ளுங்கோ ஸார்! நன்னாப் படிச்சவா பேசற பேச்சா அவாளோடது? எல்லாம் வெணைத்துத் தலைகள்! சரி, நேத்திக்கு விசாரிச்சேனே ''ம்யூடேஷன்ஸ் தியரி'' அதைச் சோதனை பண்ணிப் பார்த்தேளா? 'ரிஸல்ட்' எப்படி?''

''ஸப்ஜெக்டுக்கு வரயா? ரிஸல்ட் எப்படித் திடீர்னு வரும்? இந்த மாறுபாடு வெள்ளெலிகளில், தொடர்ச்சியற்ற முறையில் சில குணாதிசயங்களில் முயற்சி பண்ணியிருக்கேன். இது பாரம்பரியமா வரதா, இல்லையான்னு அடுத்த வெள்ளெலிக் குஞ்சுகளைப் பரிசோதனை பண்ணினால் தெரியும்!''

''அப்படீன்னு இனத்துக்கு இனம் மாற்றிக் குண மாறுபாடு செய்ய முடியாதா?''

''முடியும். ஆனால் குண மாறுபாடுகளின் புதிய உருவம் பிராணிகளில் எப்போதுதான் ஏற்படும் என்பதைக் கணக்கிட முடியாது! இப்போ எலியை விட்டு விட்டு வேறு பிராணிகளில் இதைச் செய்யப் போனால் திடீர் விளைவுகளைச் சமாளிக்க முதலில் தயாராகிக் கொள்ள வேணும்! அதுதான் பிரச்னை!''

''அப்படீன்னு திடீர் விளைவுகள் விபரீதமாகவும் இருக்கக் கூடுமோ?''

''ம்...ம்...ம்... அப்படித்தான் வச்சுக் கோயேன்! உதாரணமா, புலியோட ஹார்மோன்களை மருந்துலதான் பசுவுக்குப் புலியின் குணங்களை உண்டாக்கி விடலாம்! ஆனால் குண மாறுபாடு லாமார்க் தியரிலேருந்து மாறுபட்டால் நமக்கே கொஞ்சம் கஷ்டமாக இருக்கும்!''

''அது என்ன ஸார், லாமார்க்கின் தியரி?''—வெங்கிட்டாவின் கேள்வியில் சுவேதகேதுவின் சிரத்தை தொனித்தது. அவனே முக்கால் ஸயன்டிஸ்ட் ஆகிவிட்டிருந்தான்.

டாக்டர் நாராயணன் விளக்கலானார்.

''1809ல் லாமார்க் என்பவர் சூழ்நிலைக்குத் தக்கபடி பிராணிகளும், தாவரங்களும் எப்படித் தம்முடைய குணங்களை மாற்றிக்கொள்கின்றன என்பதைப் பற்றிய தமது கருத்தை வெளியிட்டார். 'ஒரே சூழ்நிலையில் புதிதாக ஏற்றுக்கொள்ளப்பட்ட மாறுபாடுகள் நிரந்தரமாக உடலோடு இணைந்து விடுமானால், அவை அடுத்த தலைமுறைகளுக்கும் வழி வழியாக வரும். ஆனால் இம்மாறுபாடுகளை ஓர் இனம் மற்றோர் இனத்தோடு இணைந்து சேரும்போதுதான் காண முடியும்' என்பது தான் லாமார்க்கின் 'தியரி'!'' — இப்போ நம்முடைய பிரச்னை, பசு திடீர்னு புலியாக மாறிவிட்டாலும் அதிகமான புலித்தன்மை அதனிடம் வந்துவிடாமலிருக்க, பசுவின் சூழ்நிலையை மாற்றாமல் வைக்க வேண்டும்!''

''ஒரே குழப்பமாக இருக்கே, ஸார்!'' என்றான் வெங்கிட்டா.

''இதோ, பார்! பசு புலியாகவே மாறினாலும், புல்லும் பூவரசந் தழையும் தாம்பிர வருணி ஜலமும் சாப்பிட்டுவிட்டுக் காலம் தள்ளுமா? அல்லது தினமும் இருபது கிலோ இறைச்சியை விழுங்கும் குணத்தைப் பெற்று விடுமா? அப்படித் திடீரென்று மாறினால் நம்மால் சமாளிக்க முடியுமா என்றுதான் யோசிக்கிறேன்!''

''கண்டிப்பா முடியாது!''

''ஏன் முடியாது? அரவங்குளத்தில் உள்ள சூழ்நிலையில் மரக்கறி உணவுதான் கிடைக்கும் என்றால் அதைத்தான் புலியும் சாப்பிட்டாகணும்! தன் பசுத் தன்மையை உடனடியாக விட்டுவிட முடியாது!''

''அப்படியெல்லாம் இருக்க மறுத்தால்?''

''லாமார்க் தியரி பயனற்றுப் போகும்; சூழ்நிலை வாதம் காற்றில் போகவேண்டியது தான்! புலியாக மாறிய பசு ஊரையே ஒரு கலக்குக் கலக்கி விடும்!''

''ஏன் ஸார்? இவ்வளவு விஷய ஞானம் இருக்கறப்போ வெறும் வெள்ளெலிகள், முயல் குட்டிகளைச் சோதனை பண்ணிப் பார்க்கிறதை விட நிஜமாகவே ஒரு பசு-புலி 'ம்யூட்டேஷனை' நீங்களே உண்டாக்கலாமே! உங்களுடைய கண்டுபிடிப்பே விஞ்ஞான உலகத்துக்கு ரொம்பப் பயன்படலாமே!''

''உன்னோட உற்சாகத்துக்காகவாவது ஏதேனும் செய்யலாம்னு தோணறது! ஆனா நல்லா வளர்ந்த மாடு ஒண்ணு முதல்லே வேணும். எவன் தருவான்? போறாக் குறைக்கு ஏகத்தாறுக ஏதாவது விளைவு ஏற்பட்டால் உங்க ஊர்க்காரா என்னைச் சும்மா விட்டு விடுவாளா, பல்லுக்கிடையில் வைத்துக் கிழிச்செறிஞ்சுடுவாளே!''

''அப்படி வாங்கோ வழிக்கு! மாடு வேணுமானாலும் நான் தரேன். எங்க தாத்தா கோவிலுக்காக விட்ட கன்னுக்குட்டி இப்போ பெரிய மாடா வளர்ந்திருக்கு! ஆனால், மனுஷனை அவ்வளவு வயிற்றுப்பாட்டைக் கழுவத் திணறுகிற போது அதை யாரும் கவ

# இரவிலே கடுமையாகும் இருமலை நிறுத்த அதிகச் சக்தி வாய்ந்த மருந்து!



இருமலைக் கட்டுப்படுத்தும்
கேந்திரம் சிலிர்க்கிறது.



ஃபார்முலா 44 இருமலைக
கட்டுப்படுத்தும் கேந்
திரத்திற்கு இதமளிக்கிறது.




இருமல் தொடங்கும் கட்டுப்பாட்டுக் கேந்திரத்திலேயே உடனடியாகவும், அதிகச் சக்தியுடனும் செயல் புரிகிறது விக்ஸ் ஃபார்முலா 44. எனவே உங்கள் இருமல் நின்று விடுகிறது.

அதேசமயம், இந்த நவீன இருமல் மிக்சரில் சேர்ந்துள்ள மருந்துப்பொருள்கள் உள்ளே ஊடுருவி, சுவாசக் குழாய்களின் அடைப்பை நீக்குகின்றன. வலியிருந்து மார்புச் சளியை அகற்றி தொண்டை எரிச்சலுக்கும் இதமளிக்கின்றன.

அதிகச் சக்தி வாய்ந்த விக்ஸ் ஃபார்முலா 44 அருந்தி இரவில் கடுமையாகும் இருமலிலிருந்து விரைவிலே நிச்சயமான நிவாரணம் பெறுங்கள். அயர்ந்த உறக்கமும் உங்களுக்குக் கிடைக்கும்

**விக்ஸ் பார்முலா 44 கஃப் மிக்சர்**

விக்கிறதில்லே. இப்போ நாம் ஈடுபட்டுக் கவனிச்சா யாரும் கவலைப்படப் போறதில்லே.''

''நல்ல ஸஜெஷன்தான்! ஆனால் வெறும் மாட்டைக் கொண்டு வந்து நிறுத்தி இதைப் புலியாக மாத்துன்னு சொன்னாப் போறுது! அடிப்படையாக உள்ள நூறு பிரச்னைகளைச் சமாளிக்கணும்! எல்லாத்துக்கும் மேலாக, புலியின் ஹார்மோன்களைத் தயார் பண்ணணும்! அதுதான் ஹிமாலயன் டாஸ்க்!'' என்றார் டாக்டர்.

அடுத்த இரண்டு மாதங்களுக்கு முழு நேரச் சோதனையிலேயே மூழ்கிப் போனார் டாக்டர் நாராயணன். இரவு பகலாக அவரது சோதனைக் கூடம் சுறுசுறுப்பாக இயங்கியது. அங்கிருந்த மேஜைகளிலும் நாற்காலிகளிலும் நிரம்பித் தரையிலும் வழிந்து கொண்டிருந்தன சிறியதும் பெரியதுமான பல அறிவியல் நூல்கள். புலி இனங்களின் வாழ்க்கை முறைகளையும் அவற்றின் பழக்க வழக்கங்களையும் ஆராய்ந்து ஜிம் கார்பெட் போன்ற வேட்டைக்காரர்கள் எழுதிய நூல்கள் முதலாகப் பரிணாம தத்துவத்தின் ஆதாரங்களடங்கிய குழப்பம் மிக்க எழுத்துக்கள் வரை அங்கே காணப்பட்டன. அந்த அறிவிலக்கியக் குவியலின் நடுவே சம்மணமிட்டு அமர்ந்து உபயோகமான குறிப்புக்களை எழுதிக் கொண்டிருந்தான் வெங்கிட்டா. டாக்டரோ இடைவிடாமல் அமிலங்களையும் உயிரணுக்களையும் பிரித்தும் இணைத்தும் மாறி மாறிச் சோதனைகளைச் செய்வதில் ஈடுபட்டிருந்தார்.

இதற்கிடையே ஒட்டுச் சேர்த்தால் மாட்டின் உடலோடு இணைந்து வளரக் கூடிய புலியின் உயிரணுக்கள் சம்பாதிப்பது பெரும் பிரயத்தனமாகி விட்டது. இறுதியில், நீண்ட கடிதப் போக்குவரத்துக்குப் பின் மைசூர் மிருகக் காட்சிசாலை அதிகாரிகளின் உதவியுடன் முதிர்ந்த புலி ஒன்றின் ஹார்மோன்களையும் உயிருள்ள செல்களையும் தருவித்தார். ஏற்கனவே திட்டமிட்டுத் தயாரித்திருந்த 'பார்முலா' வின்படி அவற்றைக் கோவில் மாட்டின் உடலோடு இணைந்து ஒட்டுப் போட்டார். மாறுபட்ட இரு உயிரணுப் பிரிவுகளின் ரத்த நாளங்களையும் சேர்த்துச் செயல்பட வைத்தார். பாதுகாப்பான பட்டிக்குள் அடைக்கப்பட்டிருந்த அதன் வளர்ச்சி கூர்ந்து கவனிக்கப்பட்டது.

இடையிடையே ஊராரின் வம்புப் பேச்சும் ஏச்சும் குறைவற்று நடந்தது. தர்மப் பாதுகாவலர் சாமா சாஸ்திரி கோவில் மாட்டைத் துன்புறுத்துவதாக டாக்டரைக் குற்றம் சாட்டினார். மேலும் மூன்று மாதங்களில் மாறுபாடு ஏதுவும் மாட்டின் உடலில் ஏற்படும் என அவர் எதிர்பார்க்கவில்லை. ஆகையால் ஊராரின் வாயையாவது சிறிது காலம் மூடி வைக்கலாம் என்ற எண்ணத்துடன் டாக்டர் மாட்டை விடுவித்து, முன் போலவே சுதந்திரமாகத் திரிய விட்டு விட்டார்.

இந்தாறு மாதங்களாக அவரது பராமரிப்பில் வேளா வேளைக்குப் புல்லும், பிண்ணாக்குமாக உண்டு வந்த மாடு இப்போது சீராட யாருமில்லாமல் அரை உயிராகிவிட்டது. ஊராரின் வம்புப் பேச்சால் கிடைத்த சுதந்திரம் அதன் பசியைத் தீர்க்க உதவவில்லை. மீண்டும் நலிந்துள்ளம் மெலிந்து வாடி நடைப்பிணமாய் உலவியது அது.

'ஆய்யோ முறையோ' என்று அலறிக் கொண்டு டாக்டரின் அறைக்குள் நுழைந்தான் மலையாண்டி.

''என்ன ஆச்சு மலையாண்டி? ஊரே இடிந்து போகிற மாதிரிக் கூச்சல் போடறே?''

''பின்னே என்ன சாமி? ஒரே அநியாயமாயிருக்கு? என்னோட பெரிய சேவலைக் கோவில் மாடு கடிச்சுத் தின்னுட்டுதுங்க! முப்பது ரூபா விலை பெறுமான சேவலுங்க!''

டாக்டரின் முகம் பிரகாசமடைந்தது. தமது சோதனையில் வெற்றி ஒளிர ஆரம்பித்ததில் அவருக்குப் பரம சந்தோஷம் ஏற்பட்டது. ஆனாலும் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், ''கோயில் மாடு தானே தின்றது? தர்மகர்த்தாவிடம் போய்ச் சொல்லேன்!'' என்றார்.

''அவருதாங்க உங்களிடம் அனுப்பிட்டாரு! மாடு சேவலைத் தின்கிற மாதிரி கலி முத்திப் போச்சேன்னேன். அவரு என்ன டான்னு, 'கலி ஒண்ணும் முத்தலே மலையாண்டி, ஒங்க டாக்டர் ஐயாதான் மாட்டை முத்த வச்சிட்டாரு' இங்கிறாரு. கடைசிலே நஷ்டம் என்னுடையது. யாரு தர்றாங்க?''

விஷயம் மேலும் முற்றி வம்பாக வளர்வதை விரும்பாத டாக்டர் மலையாண்டியின் காதோடு காதாக ஏதோ சொன்னார். அவனும் மகிழ்ச்சியுடன் தலையை ஆட்டிவிட்டு டாக்டர் கொடுத்த பணத்தை வாங்கிக் கொண்டு வெளியேறினான்.

மேலும் காலதாமதமின்றி மாட்டைப் பிடித்து வந்து பரிசோதித்தார். அதன் பற்கள் புலியின் பற்களைப்போல் மாறிவிட்டிருந்தன. மாமிசபட்சணியின் குணங்கள் பல அதனிடம் குடிகொண்டிருந்தன. பல விரிவான சோதனைகள் நடத்தி, தாம் கண்ட விளைவுகளைக் குறித்து, பெரிய ''தீஸிஸ்' ஒன்றையே எழுதி விட்டார். வெங்கிட்டாவுக்கோ, தன் முயற்சியாலேயே இவை எல்லாம் நடந்தன என்பதில் தலைகால் புரியவில்லை.

நாளடைவில் கிராம மக்களின் கோழிக் குஞ்சுகளும் ஆட்டுக் குட்டிகளும் பெருமளவில் காணாமற் போயின. கிராமவாசிகள் கோவில் மாட்டைக் கையும் களவுமாகப் பிடித்து நையப் புடைத்தனர். எல்லோருமாகச் சேர்ந்து அதை ஊரை விட்டே துரத்தியும் விட்டனர்.

வெங்கிட்டாவுக்குப் பெரும் ஏமாற்றமாகப் போயிற்று. யாராக்கும் மக்ரிஸ—ம் கண்ட உண்மைகளின் பலனை நடைமுறையில் காண விரும்பிய அவனது ஆசையில் மண் விழுந்தது. டாக்டரின் ஆராய்ச்சியை ஒழித்துக் கட்டிய பெருமையுடன் 'பிரிட்ஜ்' குழு கெக்கலித்தது.

கொஞ்ச காலத்துக்குக் கிராமமே 'டல்' லடித்துப் போய், திடீரென்று ஒரு நாள்

விழித்துக் கொண்டது. ஊருக்குப் பின்புற மிருந்த பனந்தோப்பை நோக்கி மக்கள் விரைந்து கொண்டிருந்தனர். யாரோ வந்து மணியம் வேதாசலத்திடம் சொன்னார்கள். கழுத்து துண்டிக்கப்பட்ட சடலம் ஒன்று பனந்தோப்பில் கிடந்தது. ஊரை விட்டுத் துரத்தப்பட்ட கோவில் மாடு அதைச் சுவைத்துத் தின்று கொண்டிருந்தது. எவ் விதமான பரபரப்பும் விசித்திரமும் இல்லா திருந்த கிராமம் முழுதுமே இரண்டு பனந் தோப்புக்கு வந்து விட்டது. மாடு மாமிசம் சாப்பிடுகிறதாம் — அதுவும் நர மாமிசம் !

மனிதர்களின் ஆரவாரம் அதிகமாகவும் மாடு வெருண்டு போய்ச் சிறிது தொலைவில் கட்டைச் சுவருகில் படுத்து அசை போட ஆரம்பித்தது. புதிய உருவினும் பழைய சூழ்நிலை சற்று மிருந்திருந்தது போல் தோன்றியது.

சற்றைக்கெல்லாம் கிராம முன்சீபும் போலீஸ் ஸப் இன்ஸ்பெக்டரும் தத்தம் பரிவாரங்களோடு வந்து சேர்ந்தனர். பிரேத விசாரணை நடைபெற்றது. பிரேதத்தின் தலையே அங்கு காணப்படாததால் இறந்த வர் யாரென்று அடையாளம் காண இயல வில்லை. சூழுமிருந்தவர்களின் பலரும் சம்ப வம் பற்றித் தமக்குத் தோன்றியவாறெல் லாம் தீர்ப்பு வழங்கினர். 'பிரிட்ஜ்' குழுவின ரும் விட்டபாடில்லை. சடலத்தை மாடு ருசித்துக் கொண்டிருந்ததையும் நாலைந்து நாட்களாக டாக்டர் ஊரில் காணப்படாத தையும் இணைத்துப் பேசினர். மிருக வைத்திய ரின் சோதனைகளாலேயே மாமிச பட்சணி யாக மாறிய மாடு, முடிவில் அவரையே தீர்த்துக் கட்டிவிட்டது என்று அபிப் பிராயம் தெரிவித்தது. எல்லா யூகங்களையும் குறிப்பெடுத்து ஸப் இன்ஸ்பெக்டர் மாவட்ட மிருக வைத்திய அதிகாரிக்கும் உயர் போலீஸ் அதிகாரிகளுக்கும் அவசரத் தகவல் அனுப்பி வைத்தார். சடலம் வைத்தியப் பரிசோதனைக்கு எடுத்துச் செல்லப்பட்டது.

மாவட்டக் கால்நடை அதிகாரி தாம் நடத்திக் கொண்டிருந்த அவசரக் கூட்டத் தின் நடுவே வந்த போலீஸ் ரிப்போர்ட் டைப் படித்து விட்டுக் 'கட கட' வென்று உரக்கச் சிரித்தார்.

மீண்டும் திரும்பி டாக்டர் நாராயண னைப் பார்த்து, "என்னையா, டாக்டர் நாராயணன், உம்மை அரவங்குளத்தில் மாடு ஒன்று கொன்று தின்று விட்டதாகச் செய்தி வந்திருக்கிறதே ! நீர் எப்படி இங்கே உயிரோடு இருக்கிறீர் ?" என வினவினார்.

கூட்டத்தினர் சிரித்தனர்.

டாக்டர் நாராயணன் கேட்டார்:

"மாடு மாமிசம் தின்பதை நான் நம்பு கிறேன். ஆனால் அது தின்ற மனிதன் நான் தான் என்று எப்படித் தீர்மானித்தார்கள்?"

குறிப்பைக் கொணர்ந்த காவலர் ஒன்றும் புரியாமல் விழித்தார். டாக்டர் நாராயணன் முதன் முறையாகத் தமது சோதனைகளை விவரித்தார். உடனேயே மற்ற அதிகாரிகள் அனைவரும் அரவங்குளத்துக்கே சென்று நாராயணன் கொல்லப்பட்டது உண்மை யல்ல என்று உறுதி செய்யவும் மாமிச பட்சணியான மாட்டைப் பரிசோதித்து வரவும் புறப்பட்டனர்.

கிராமவாசிகளுக்கு டாக்டர் நாராயணனை உயிரோடு பார்த்ததில் ஒரே ஆச்சரியம் !

கோவில் மாடு வைத்திய அதிகாரிகளால் நகரத்துக்கு இட்டுச் செல்லப்பட்டது. டாக்டர் நாராயணனின் "தீஸிஸ்" ஓர் அற்புதமான விஞ்ஞானப் பொக்கிஷமாகக் கருதப்பட்டதில் வெங்கிட்டா 'நோபல் பரிசை'ப் பெற்ற பெருமையை அடைந்தான்.

பிரிட்ஜ் குழுவோ தங்கள் அவமானத் தையும் கொடியில் உயர்த்தி விட்டுத் தனது பொழுது போக்கைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தது.

கொலையுண்ட மனிதன் யார் என்று கேட்கிறீர்களா ? அது தெரிந்து உங்களுக்கு என்ன ஆகப் போகிறது ?

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

எதிர்பாராத மகிழ்ச்சி

## புதர் அளித்த பாதுகாப்பு !

இரண்டு மாதங்களுக்கு முன் சென்னையில் நடக்கவிருந்த என் மைத்துனர் கல்யாணத் துக்காக நானும் என் கணவரும் குழந்தை களுடன் கல்கத்தாவிலிருந்து புறப்பட்டு மதராஸ் மெயிலில் போய்க் கொண்டிருந் தோம். ரயில் சாமல்கோட் ஸ்டேஷனைத் தாண்டியிருக்கும். நல்ல வெய்யில் வேளை. என் இரண்டு வயதுப் பையனுக்குப் பழ ரசம் பிழிந்து கொடுத்திருந்தேன். அவன் அதைக் குடித்த பிறகு சரேலென்று ஜன்னல்வழியாக டம்ளரைத் தூக்கி எறிந்து விட்டான். என்ன செய்வ தென்று புரியாமல் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரிக்கத் தான் தோன்றியது. ஆனால் எனக்கு மட்டும் ஒரு நல்ல டம்ளர் போய் விட்டதே என்ற வருத்தம்தான்;



என் கணவருக்கு லீவு அதிகம் கிடைக்காத தால் கல்யாணம் முடிந்த அன்றே நாங்கள் கல்கத்தா திரும்ப வேண்டியிருந்தது. ரயில் சாமல்கோட் ஸ்டேஷனை நெருங்கிக்கொண் டிருந்தது. சிக்னல் கொடுக்காத காரணத் தால் வண்டி நின்றது. அப்பொழுது நான் என் கணவரிடம் தமாஷாகச் சொன்னேன், "இங்கு எங்கேயோதான் குழந்தை டம்ளரைப் போட்டான். போய்த் தேடிப் பாருங்களேன்" என்று. அவ ரும் சிரித்துக்கொண்டே வண் டியிலிருந்து இறங்கி அங் கிங்கும் தேடுவதுபோல் சென் றார். என்ன ஆச்சரியம்! பக் கத்துப் புதருக்கடியிலிருந்த அந்தத் டம்ளரை எடுத்து வந்தார். அது என்னுடையதே தான். எஸ். ஆர். என்ற பெயர் இருந்தது! —எஸ்லார்

வட்டமேஜை

**அப்போலோ - 10 பயணத்துக்கும் சந்திரனில் மனிதன் காலடி எடுத்து வைத்த அப்போலோ - 11 பயணத்துக்கும் இடையில் அமெரிக்கர்கள் ஆன்மிகத் துறையிலும் ஈடுபாடு கொண்டு சுவாமி ரங்கநாதானந்தாவுக்கு நல்வரவேற்பு அளித்தார்கள். வாஷிங்டனுக்கு அருகே வசிக்கும் விஞ்ஞானி திரு வி. கே. பாலசுப்பிரமணியன் சுவாமி ரங்கநாதானந்தாவின் விஜயம் குறித்து எழுதுகிறார் :**

# மீண்டும் ஒரு விவேகானந்தர்!

அமெரிக்காவில் டெலிவிஷனில் பேட்டி நேரம் காரசாரமாகவே இருக்கும். டெலிவிஷன் நிருபர்கள் வேண்டுமென்றே குத்தலான கேள்விகளைக் கேட்பதில் பிரசித்தி பெற்றவர்கள். அப்போதுதான் பேட்டியில் களை கூடும் என்று கருதுபவர்கள். ஆனால் சுவாமி ரங்கநாதானந்தாவை ''வேதாந்தமும் இன்றைய சமூகத்துக்கு அதனாலான பயனும்'' என்ற தலைப்பில் அவர்கள் பேட்டி கண்டபோது மிகவும் கண்ணியமாக நடந்துகொண்டார்கள். சுவாமிஜியை அன்று டெலிவிஷன் திரையில் கண்ட அனைவரும் அவரது எடுப்பான தோற்றம், சாந்தம் நிலவும் முகம், சத்திய ஒளி மிளிரும் வார்த்தைகள் ஆகியவற்றால் மிகவும் ஈர்க்கப்பட்டிருப்பார்கள். அமெரிக்கா போன்ற செல்வச் செழிப்பு மிக்க சமூகத்தில் ஆன்மிகத் துறையில் மக்களின் மனம் ஈடுபட வேண்டியது எவ்வளவு அவசியம் என்பதை அவர் தெளிவாக எடுத்துச் சொன்னார்.



வாஷிங்டனுக்கு அருகே ஒரு சர்வ மதக் கோயில் உள்ளது. **Temple of understanding** என்ற பெயர் கொண்ட இந்தக் கோயிலில் பகவான் புத்தர் பரிநிர்வாணமடைந்த வைசாக விழா கொண்டாடப்பட்டது. அமெரிக்கத் தலைநகரில் ராஜீய அலுவல்களில் ஈடுபட்டுள்ள சர்வ தேசங்களைச் சேர்ந்தவர்கள் ஏராளமாகக் குழுமியிருந்தார்கள். அன்றைய விழாவில் பிரதான பேச்சாளர் சுவாமி ரங்கநாதானந்தாதான். ''இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின் உலகமும் அதில் வாழும் மக்களும் எவ்வளவோ மாறுதல்களுக்கு உட்பட்ட பின்பும் இன்றைக்கும் புத்தருடைய வாக்குகளுக்கு மதிப்பு இருப்பது எதனால்?'' என்று கேட்டார் சுவாமிஜி. ''அவரது அருள்வாக்குகள் அமரத்துவம் பெற்றவை; காரணம் எக்காலத்துக்கும் பொருந்தும் சத்தியங்களை அவர் போதித்தார்'' என்றார். ''2500 ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் ஒரு புத்தர் தோன்றுவார் என்பதில்லை. நாம் அனைவருமே உண்மையுடன் பாடுபட்டால் புத்தர்களாக முடியும்'' என்று சொன்னார் ஸ்வாமிஜி.

இதே சர்வ மதக் கோயிலில் இன்னொரு கூட்டத்திலும் பேசினார் சுவாமி ரங்கநாதானந்தா. இதற்கு அனுமதிச் சீட்டு உண்டு. நபருக்கு இரண்டு டாலர்கள் வசூலித்தார்கள். (சுமார் ரூ. 15) இருப்பினும் கூட்டம் நிரம்பி வழிந்தது.

அன்று சுவாமிஜியின் பேச்சு 'சிகாகோவில் விவேகானந்தர் பேசியது இப்படித்தான் இருந்திருக்குமோ' என்று அனைவரும் நினைக்கும்படி அத்தனை சிறப்பாக இருந்தது. பெர்ட்ராண்ட் ரஸ்ஸல், ஜூலியன் ஹக்ஸ்லி, எச். ஜி. வெல்ஸ் ஆகியோரது நூல்களிலிருந்தும் உபநிஷதங்களிலிருந்தும் பல மேற்கோள்களை எடுத்துக் கூறினார். ஒன்றரை மணி நேரப் பேச்சின்போது ஒரு நபர் கூட எழுந்து போகவில்லை. பேச்சு முடிந்த பிறகு பலர் தனிப்பட்ட முறையில் அவரைப் பாராட்டவோ, கேள்விகள் கேட்கவோ காத்திருந்தனர். ''மாறுதலடைந்து வரும் சமூகத்துக்கு சாசுவதமான தத்துவங்கள்'' என்ற தலைப்பில் சுவாமிஜி பேசினார். ''இன்றைய உலகில் மனிதன் காணும் பல பிரச்னைகள்; மனிதனுக்குள்ள பல ஏக்கங்கள்; ஏமாற்றங்கள்; இன்ப துன்பங்கள்; கோப தாபங்கள் இவற்றையெல்லாம் சமூக இயல் விஞ்ஞானிகள் ஆராய்ந்து பாகுபடுத்திச் சொல்ல முடியுமே தவிர இவற்றுக்கு நல்ல பரிகாரத்தை விஞ்ஞான ரீதியாகக் கூற அவர்களால் முடியாது. தொன்மையான இந்தியாவின் வேதாந்தக் கருத்துக்கள் தாம் மனித சமூகத்தின் இத்தகைய பிரச்னைகளுக்குத் தக்க பரிகாரமாக விளங்கி உதவ முடியும்'' என்றார். மனிதன் தனக்குத் தானே சில கட்டுப்பாடுகளை விதித்துக் கொள்வதன் நன்மைகளையும், அந்தக் கட்டுப்பாடுகளே சுதந்திர முன்னேற்றத்துக்கு எப்படி உதவ முடியும் என்பதையும் சுவாமிஜி அழகிய உதாரணங்களோடு விளக்கினார்.

சுவாமிஜி பேசி முடித்ததும் அனைவரும் எழுந்து நின்று நீண்ட நேரம் கரகோஷம் செய்தார்கள்.

வாஷிங்டன்,
15-6-69 வி. கே. பாலசுப்பிரமணியன்

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**
**Managing Editor: T. Sadasivam**

REGISTERED No. M. 4399
Registered as a Newspaper in Ceylon